வற்றாத நுரைவளமும் குன்றாத நறுமணமும்
ஒன்றாக விரவி நின்று நன்றாக முடிவளர்க்கும்
குளிர்ச்சிமிக்க ஒரே மூலிகை ஷாம்பு.

# கிரௌன் ஹெர்பல் ஷாம்ப்பு






முற்றிலும் மூலிகைச் சாறுகளால் உருவாகி,
குற்றால அருவியின் குளுமையும்,
வற்றாத நுரைவளமும் கொண்டது!
கண்களுக்குக் குளிர்ச்சியை அளிக்கிறது!
முடி உதிர்தலைத் தடுத்து நிறுத்துகிறது!
இளநரை வராமல் பாதுகாக்கிறது!
பொடுகுகளைப் போக்குகிறது!
அரிப்புத்தினவுகளை அகற்றுகிறது!
முடிகள் அடர்த்துவளர உதவுகிறது!
முடிக்கற்றைகளை வழவழப்பாக்குகிறது!

தீங்குகள் மலிந்த செயற்கை ஷாம்புகளின் மத்தியில் முற்றிலும் மாறுபட்ட, மகத்தான, ஒரே மூலிகை ஷாம்பு!



குளிப்பதற்கு 15 நிமிடங்களுக்கு முன்
தலையில் தேய்த்துக்கொண்டு
அதன் பிறகு குளிக்கும்போது
பெருகின்ற குளுமையும் சுகமுமே
அலாதிதான்!



தயாரிப்பாளர்கள்:
கிரௌன் ரிசர்ச் லேபாரட்டரீஸ்
2, சப்பராய முதலித் தெரு, சென்னை-600 002.

CHP/S/1/86

Distributors for Malaysia : M/s. KOPERASI BELIA MAJUJAYA (M) BERHAD WISMA ANBANANTHAN, 88-JALAN BRICKFIELDS,
KUALA LUMPUR, MALAYSIA PHONE : 443748, 442100
M/s. P. GOVINDASAMY PILLAI S'PORE (PTE) LTD. 46,48,50 & 52, SARANGOON ROAD, SINGAPORE-0821 PHONE : 3372050

# கொள்ளை போகும் கோயில் சொத்துக்கள்!

## —நெடுமாறன் அம்பலப்படுத்துகிறார்



கேள்வி: கோயில் சொத்துக்கள் கொள்ளை போவது பற்றிச் சட்டசபையில் பல ஆதாரங்களுடன் நீங்கள் பலமுறை பேசியிருக்கிறீர்கள். இதனால் ஏதேனும் குறிப்பிடத்தக்க மாற்றம் நிகழ்ந்துள்ளதா?

பதில்: அறநிலையத் துறை அமைச்சராக இருந்த ஆர். எம். வீரப்பன் பதவி நீக்கம் செய்யப்பட்டுள்ளார் என்பதுதான் குறிப்பிடத்தக்க மாற்றம். மற்றபடி, கோயில் சொத்துக்களை முறையாக மதிப்பிட, ஓர் உயர்நீதி மன்ற நீதிபதியின் தலைமையில் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்று சட்டசபையில் வலியுறுத்தினேன். அதைத் தொடர்ந்து ஜஸ்டிஸ் கிருஷ்ணசாமி ரெட்டியார் தலைமையில் ஒரு கமிஷனை நியமிப்பதாக 1984 இல் சட்டசபையில் கூறினார் எம். ஜி. ஆர். ஆனால் அன்று என் வாயை அடைப்பதற்காகச் சொன்ன வார்த்தையை அவர் காப்பாற்றவே இல்லை. '86 இடைத் தேர்தலில் ஆர்.எம்.வீ. போட்டியிட்ட போது நான் இந்த விஷயத்தை மீண்டும் எடுத்துச் சொன்னேன். அப்போது அவசர அவசரமாக கமிஷனை ஏற்படுத்தினார் எம். ஜி. ஆர். ஆனால் இந்தக் கமிஷன் முறையாகச் செயல்படுவதற்கு ஓர் அலுவலகமோ இதர வசதிகளோ இதுவரை செய்து தரப்படவில்லை. கமிஷன் தனது வேலையை ஆரம்பிக்காமலேயே இருக்கிறது.

கே: இதுவரை கோயில் சொத்துக்கள் சரியாக மதிப்பிடப்படவில்லை என்கிறீர்களா?

ப: தென் திருப்பேரைக் கோயிலில் களவு போன நகைகளின் மதிப்பு 87,000 ரூபாய் பெறும்என்றுகாவல்துறைகூறுகிறது. ஆனால் ஊர் மக்களோ அது இரண்டு கோடிக்கும் மேல் பெறும் என்று மதிப்பிடுகிறார்கள். இது போன்ற வித்தியாசங்கள் இருப்பது ஆபத்து. நகைகளைப் பற்றி அறிந்தவர்கள்தான் மதிப்பீட்டாளர்களாக இருக்க வேண்டும். தமிழ்நாட்டில் உள்ள எல்லாக் கோயில்களிலும் எவ்வளவு சொத்து, நகைகள் இருக்கின்றன, அவற்றின் மதிப்பு என்ன, என்பது யாருக்குமேதெரியாது. கன்னியாகுமரிகேரள மாநிலத்தில் இருந்த போது கன்னியாகுமரி கோயில் நகைகள், அவற்றின் மதிப்புப் பட்டியல் மலையாளத்தில் இருந்தது. இப்போதுள்ள தமிழ்ப் பட்டியலை மலையாளப் பட்டியலுடன் ஒப்பு நோக்க வேண்டும். இராஜராஜசோழன் தஞ்சைப் பெரிய கோயிலுக்குப் பதினெட்டாயிரம் வேலி நிலத்தை இறையிலியாக அளித்தான் என அக்கோவில் கல்வெட்டுச் சான்று கூறுகிறது. ஆனால் இப்போது ஒரு வேலி நிலம் கூட அக்கோயிலுக்குச் சொந்தமாயில்லை! அக்கோயில் பூசைகள் நடைபெறுவதே பெரும் சிரமத்தில் இருந்து வருகிறது. இப்போதுள்ள நிலைமை நீடித்தால் தமிழ்நாட்



டில் உள்ள பெரும்பாலான கோயில்களின் கதியும் இப்படியே ஆகிவிடும்.

கே: மதுரை மீனாட்சி கோயிலிலிருந்து எடுத்துச் செல்லப்பட்ட 'ரிஷப வாகனம் எங்கே?' என்ற கேள்வியை எழுப்பி மிகுந்த பரபரப்பை ஏற்படுத்தியிருந்தீர்கள். இப்போது அந்த ரிஷப வாகனம் திருப்பிக் கொண்டு வந்து வைக்கப்பட்டுள்ளதாக அறிகிறோம்.

ப: ஆமாம். ஆனால் 1981 இல், உலகத் தமிழ் மாநாட்டின் போது கண்காட்சிப் பொருளாக வைக்க எடுத்துச் செல்லப்பட்ட ரிஷப வாகனத்தைச் சமீபத்தில்தான் கோயிலுக்குத் திருப்பிக் கொண்டு வந்திருக்கிறார்கள். அதுவும் ஒரு காதும் ஒரு காலும் உடைந்த நிலையில்! எப்படி உடைந்தது என்று கேட்டால் வயதாகி உளுத்துப் போய் விட்டது என்கிறார்கள்! அந்தக் காலத்தில் சுவாமி வாகனங்களை வஜ்ஜிரம் பாய்ந்த அத்தி மரங்களைக் கொண்டு செய்தார்கள். தண்ணீரில் ஊறினாலேயொழிய இந்த மரத்தாலானபொருள்கள்உளுத்துப்போகவாய்ப்பில்லை. வாகனத்தில் வலம் வரும் உத்ஸவ மூர்த்திக்கோ அபிஷேகங்கள் செய்வது கிடையாது. அப்படியிருக்க, வாகனம் எப்படி உளுத்துப் போக முடியும்? இது திட்டமிட்ட சதியாக இல்லாமல் போனாலும் சம்பந்தப்பட்டவர்களின் அலட்சியத்தையும், அஜாக்கிரதையையும் காட்டுகிறது.

கே: உடைந்த வாகனத்தைப் பழுது பார்த்துச் சரி செய்ய முடியாதா?

ப: முடியும். ஆனால் வேடிக்கை பாருங்கள்—பழுது பார்க்க இங்கே தகுந்த கைவினைஞர்கள் இல்லையாம்—சொல்கிறார்கள்! அதனால் வேறு புதிய வாகனம் செய்யப் போகிறார்களாம்! திருப்பதி கோயிலுக்கு வேண்டிய வாகனங்கள் முதலியவற்றைச் செய்யக் கூட இங்கிருந்து கலைஞர்கள் அழைக்கப்படும் போது, இதை எப்படி ஏற்றுக் கொள்ள முடியும்? அது மட்டுமல்ல, பழைய வாகனத்தில் உள்ள வெள்ளியை உருக்கி, கோயில் சொத்தோடு அதைச் சேர்த்துவிடப் போவதாகக் கூறிக் கொண்டிருந்தார்கள்! ஒரு பழமை வாய்ந்த கலைப் பொருளுக்கு நீங்கள் கொடுக்கும் மதிப்பு இவ்வளவுதானா என்று கேட்ட பிறகு அதை உருக்குவதில்லை என்று தீர்மானித்தார்கள். நமது கோயில்களில் பொறுப்பில் உள்ளவர்களின் கலை உணர்வையும், பொறுப்புணர்ச்சியையும் இந்த நிகழ்ச்சியிலிருந்தே கணித்துக் கொள்ளலாம்! மேலும், இந்த வாகனத்தைப் பேணுவதற்கென்றே ஒரு குடும்பத்திற்குத் திருமலை நாயக்கர் காலத்திலேயே மானியம் வழங்கப்பட்டுள்ளது. கடந்த பத்து ஆண்டுகளாக இந்தக் குடும்பத்தின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ளாமல், நிர்வாகமே இதனைப் பேணி வருகிறது. இவையெல்லாம் ஆரோக்கியமான அறிகுறிகள் அல்ல.

கே: கோயில்களில் நிர்வாகப் பொறுப்பில் இருப்பவர்கள் விஷயம் தெரிந்தவர்களாக இல்லை என்கிறீர்களா?

ப: ஆலயங்களில் அறங்காவலர்களை நியமிப்பதில் ஏராளமான தவறுகள் நடக்கின்றன. இந்து சமயக் கொள்கைகளுக்கும், மத ஆசார அனுஷ்டானங்களுக்கும் எதிரானவர்கள் கட்சிக்காரர்கள் என்ற ஒரே காரணத்துக்காக அந்தப் பொறுப்புக்களில் நியமிக்கப்படுகிறார்கள். இவர்களில் பலர் பிரசாதங்களைக் கூடப் பூசிக் கொள்வதில்லை. சிலர் போலீசாரின் சமூக விரோதிப் பட்டியலில் கூட இடம்பெற்றிருக்கிறார்கள்! இதன் விளைவாக ஆலயத்திற்குச் சொந்தமான நிலங்களும்கட்டடங்களும்இதரசொத்துக்களும் வேண்டியவர்களுக்குக் குறைந்த குத்தகைக்கோ வாடகைக்கோ விடப்படுகின்றன. பெரும்பாலும் வாடகையும் குத்தகையும் முறையாகச் செலுத்தப்படுவதில்லை. ஆலய நிர்வாகத்திலுள்ள சத்திரங்களும் விடுதிகளும் பஞ்சமா பாதகங்கள் நடைபெறும் இடங்களாக மாறிவிட்டன. ஆலயங்கள் சூறையாடப்படுகின்றன. உண்டியல்கள் உடைக்கப்படுகின்றன. விலை மதிப்பில்லாத விக்கிரகங்களும் நகைகளும் எளிதாகக் கொள்ளையடிக்கப்படுகின்றன. ஆலய உடைமைகளைப் பாதுகாக்க முயலும் கோயில் அதிகாரிகள், அர்ச்சகர்கள், பணியாளர்கள் போன்றோர் ஆலய வளாகங்

களுக்குள்ளேயே படுகொலை செய்யப்படுகின்றனர்.

கே: திருச்செந்தூர் கோயிலில் நடந்த படுகொலை பற்றியும் பால் கமிஷன் அறிக்கை பற்றியும் குறிப்பிடுகிறீர்கள் என்று நினைக்கிறோம்...?

ப: பால் கமிஷன் அறிக்கையில் இரு பகுதிகள் உண்டு. ஒன்று கொலை சம்பந்தப்பட்ட அவரது கணிப்பும் சிபாரிசும். அது பற்றி ஏதோ பூசி மெழுகியிருக்கிறார்கள். மற்றொரு பகுதி ஆலயங்களின் நிர்வாகம் சீர்படப் பொதுவான அவரது சிபாரிசுகள். இந்த இரண்டாவது பகுதி,முதல் பகுதியை விட முக்கியமானது. காரணம் ஆலயங்களில் மோசடிகளும் திருட்டுப் புரட்டுகளும் அதன் பின்விளைவான வன்முறைகளும்நிகழாதிருக்க நிர்வாகச் சீரமைப்பே உதவ முடியும். ஆனால் பால் கமிஷன் பரிந்துரைத்துள்ள நிர்வாகச்சீரமைப்புக்களைஅ.தி.மு.க.அரசு அமுல் படுத்தவேயில்லை. இதேபோல் டிசம்பர் '83 இல் படுகொலை செய்யப்பட்ட ஸ்ரீரங்கம் கோயில் தணிக்கை ஆய்வாளர் வெங்கடாசலத்தின் மரணம் குறித்தும் விசாரணை நடத்தப்பட்டது. ஆனால் விசாரணையின் முடிவு என்ன? அதன் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என்பது குறித்து எந்தத் தகவலும் இல்லை. தென்திருப்பேரைக் கோயிலில் இரண்டு கோடி ரூபாய் பெறுமானமுள்ள நகைகள் காணமல் போனதைத் தொடர்ந்து அங்கு எடுத்துச் செல்லப்பட்ட போலீஸ் நாய், அக்கோயில் தக்கார் பம்பரமணி என்பவரை அடையாளம் காட்டியது. இதைத் தொடர்ந்து நகைகள் கண்டுபிடிக்கப்பட்டதாக ஸ்தல போலீஸ் அதிகாரி தெரிவித்தார். ஆனால், திடீரென்று வழக்கு ஸ்தல போலீஸ் அதிகாரிகளிடமிருந்து பிடுங்கப்பட்டுக் குற்றப் புலனாய்வுத் துறையிடம் ஒப்படைக்கப்பட்டது. அதன் பின் நகைகளின் கதியும் தெரியவில்லை, குற்றம் சாட்டப்பட்ட தக்கார் என்னவானார் என்பதும் தெரியவில்லை. சில ஆண்டுகளுக்கு முன் நெல்லை மாவட்டம் களக்காடு என்ற ஊரின் கோயிலிலிருந்து சுமார் ஒரு கோடி ரூபாய் பெறுமானமுள்ள நகைகள் திருடு போய் விட்டன. அவைகளில் ஒரு பகுதி மட்டுமே கைப்பற்றப்பட்டது என்று சொன்னார்கள். புலன் விசாரணை நடத்திய போலீஸ் அதிகாரிகளும், சம்பந்தப்பட்ட அறநிலையத் துறை அதிகாரிகளும், கோயில் தக்காரும் நகைகளைத் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர் என்ற குற்றச்சாட்டு எழுந்தது. இதன் விளைவாக ஐந்து போலீஸ் அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்யப்பட்டனர். அதன் பிறகு என்ன நடந்தது என்பது இதுவரை வெளிப்படாத மர்மம்!

கே: இதுபோன்ற குற்றங்களும் முறைகேடுகளும் மோசடிகளும் திருட்டுப் புரட்டுகளும் நிகழாமல் தடுக்கவே கோயில்கள் சுயாதிக்க அமைப்புக்களால் நிர்வகிக்கப்பட வேண்டும் என்கிறீர்களா?

ப: ஆமாம். இஸ்லாமிய கிறிஸ்துவ மதங்களுக்குச் சுயாதிக்க அமைப்புக்கள் உள்ளன. அவை எதுவும் அரசு கட்டுப்பாட்டுக்குள் வருவதில்லை.

கே: ஆதி காலந்தொட்டு மன்னர்களாலும் பிறகு ஆங்கிலேய அரசாலும் பிறகு நமது அரசாலும் நிர்வகிக்கப்பட்டு வந்த கோயில்கள் திடீரென்று சுயாதிக்க அமைப்

**இந்தியாவின் வேறு எந்த மாநிலத்திலும் இல்லாத அளவுக்குத் தமிழ்நாட்டில் அதிகமாகக் கோயில்கள் உள்ளன. தமிழ்நாட்டில் பெரிதும் சிறிதுமான சிவன் கோயில்களும், விஷ்ணு கோயில்களும் மற்ற கோயில்களும் 32,130 உள்ளன. 55 மடாலயங்களும், அம்மடாலயங்களுடன் இணைக்கப்பட்டுள்ள 55 கோயில்களும் உள்ளன. அறக்கட்டளைகள் 1,721ம், சமண சமய நிறுவனங்கள் 176 ம் அது சம்பந்தமான அறக்கட்டளைகள் 189 ம் உள்ளன. ஆக மொத்தத்தில் 34,167 இந்து சமய நிறுவனங்கள் தமிழ்நாட்டில் உள்ளன. இவற்றிற்குச் சொந்தமான நஞ்சை புஞ்சை நிலங்கள் சுமார் 5 இலட்சம் ஏக்கர் உள்ளன. இவை தவிர பல்லாயிரக்கணக்கான கட்டிடங்கள் ,காலிமனைகள் உடைமைகளாக உள்ளன. இந்தச் சொத்துக்களின் ஆண்டு வருமானம் 18.57 கோடி என மதிப்பிடப்பட்டுள்ளது. இதில் 10 பெரிய கோயில்களிலிருந்து மட்டும் சுமார் 5.5 கோடி ரூபாயும் மற்றும் 100 கோயில்களிலிருந்து சுமார் 2.5 கோடி**



**ரூபாயும் வருமானமாகக் கிடைக்கிறது. இது தவிர இவ்வளவு பெரிய சொத்துக்களிலிருந்து கிடைக்கும் வருமானம் சுமார் 10 கோடிதான்.**



பின் கீழ் வந்தால் நிர்வாகம் சரியாக இருக்காது என்கிறீர்களா?

ப: மன்னர்கள், இன்றைய ஆட்சிப் பொறுப்பில் இருப்போரைப் போல் தங்களுக்கு எந்த சமயத்திலும் நம்பிக்கை இல்லை என்று பெருமையுடன் சொல்லிக் கொள்ளவில்லை. அவர்கள் சமயத்தின் பால் பற்றுக் கொண்டவர்களாக, அதன் காவலர்களாக விளங்கினார்கள். அந்த மன்னர்களோ அல்லது அவர்களது முன்னோர்களோதான் அக்கோயில்களைக் கட்டினார்கள். அவற்றுக்கு நிவந்தங்கள், மானியங்கள், நகைகளைத் தந்தார்கள். பூசை நிர்வாகம் போன்ற செலவுகளையும் தாங்களே ஏற்றுக் கொண்டார்கள். எனவே அவர்கள் நிர்வாகத்தின் கீழ் ஆலயங்கள் இருந்தது நியாயம். மேலும், கோயில் நிர்வாகத்தைக் கவனிக்க அவர்கள் தனி அமைப்புக்களை நிறுவியிருந்தார்கள்; நேரடியாகத் தாங்களே நிர்வாகம் செய்யவில்லை. ஆனால், மன்னர்கள் காலத்தில் இருந்தது என்று காரணம் காட்டி நமது அரசுகளும் கோயில்களை நிர்வகிக்க விரும்புவது அடிப்படையில் தவறானதாகும். **தமிழக அரசாங்க நிதியிலிருந்து ஒரு காசு கூட கோயில்களுக்காகச் செலவழிக்கப்படுவதில்லை.** மாறாக, ஆலயங்களின் உபரிநிதியை அ. தி. மு. க. அரசு சத்துணவுத் திட்டம் போன்றவற்றிற்கு எடுத்துக் கொள்கிறது. 1983 ஆம் ஆண்டு ஆலயங்கள் நிதியிலிருந்து ரூ. 51 இலட்சம் சத்துணவுத் திட்டத்துக்கு வழங்கப்பட்டது. மன்னர்களும், பக்தர்களும் ஆலயங்களுக்கு அளித்த மானியங்கள் நிவந்தங்கள் குறிப்பிட்ட காரியங்களுக்கென்று வழங்கப்பட்டவை. அதேபோல் இன்று பக்தர்கள் அளிக்கும் உண்டியல் காணிக்கை போன்றவையும் சமய உணர்வுடன் அளிக்கப்படுபவை. அந்தப் பணத்தை அரசாங்கம் தன்னுடைய திட்டங்களை நிறைவேற்றப் பயன்படுத்துவது முறைகேடான, ஒழுக்கக் கேடான செயல். எனவேதான் இந்து அறநிலையத்துறை சுயாதிக்கமுடையதாக இருக்க வேண்டும் என்று வலியுறுத்தி வருகிறேன். இதை நான் இன்று புதிதாகச் சொல்வதாக நினைக்க வேண்டாம். 1960 இலேயே சர்.சி.பி. ராமசாமி அய்யர் இது சம்பந்தமாக விரிவாக ஆராய ஆரம்பித்தார். அவர் தலைமையில், ஆறு பேர்கள் அடங்கிய குழு ஒன்று இரண்டாண்டு காலம் இந்தியா முழுவதிலும் சுற்றுப் பயணம் செய்து, மடாதிபதிகளையும் சமயப் பெரியோர்களையும் சந்தித்து, அவர்களது கருத்துக்களைக் கேட்டறிந்து மத்திய அரசுக்கு ஓர் அறிக்கை வழங்கியது.

கே: கோயில் நிர்வாகங்கள் மாநில அரசு பட்டியலில் அல்லவா இருக்கின்றன?

ப: மாநில அரசுகளுக்கு ஸர். சி.பி.யின் பரிந்துரைகள் 1962 இல் மத்திய அரசால் அனுப்பி வைக்கப்பட்டன. இன்றளவும் தமிழக அரசு இப்பரிந்துரைகளின் அடிப்படையில் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை. ஸர். சி. பி. யின் பரிந்துரைகளை நான் சட்டசபையில் குறிப்பிட்ட போது, அப்படி ஓர் அறிக்கை இருப்பதாகவே ஆளுங் கட்சியினருக்குத் தெரியவில்லை.

கே: ஸர். சி. பி. யின் பரிந்துரையில் என்ன குறிப்பிடப்பட்டுள்ளது என்று சுருக்கமாகச் சொல்ல முடியுமா?

ப: அறநிலையத்துறை ஆணையாளர் ஆளுனரால் நியமிக்கப்பட வேண்டும் என்று ஓர் ஆலோசனை வழங்கியுள்ளது. தற்போது ஆணையாளர் அரசாங்கத்தால் நியமிக்கப்படுவதால் ஆட்சியில் உள்ளோரின் விருப்பு வெறுப்புகளுக்கு ஏற்ப அவர் ஆலய நிர்வாகத்தை நடத்திட வேண்டியிருக்கிறது. மேலும், அறநிலைய நிர்வாகங்களில் ஏற்படும் விவகாரங்களை விசாரிப்பதற்காக ஒரு டிரிபியூனல் அமைக்கப்பட வேண்டுமென்றும் ஸி. பி. சொல்லியிருக்கிறார். இந்து மத சம்பிரதாயங்கள், பழக்க வழக்கங்கள், பண்பாடு, இந்து சாஸ்திர அறிவு முதலியவற்றில் தேர்ந்தவர்களும் அரசாங்க நிதித் துறையில் பத்து ஆண்டு அனுபவம் பெற்ற ஐ. ஏ. எஸ். அதிகாரிகளும் இந்த டிரிபியூனலில் இடம்பெற வேண்டும். இதற்குத் தலைவராக உயர்நீதிமன்ற நீதிபதி அல்லது அப்பதவிக்குத் தகுதி உடையவர் நியமிக்கப்பட வேண்டும். முக்கியமான விஷயங்களில் அறநிலையத்துறை ஆணையர் இந்த டிரிபியூனலிடம் ஆலோசனை பெறலாம். மடாலயத் தலைவர்கள், பரம்பரை அறங்காவலர்கள் ஆகியோர் பற்றியும் அவர்களின்

வாரிசு பற்றியும் முடிவு செய்கிற அதிகாரம் இந்த டிரிபியூனலுக்கே இருக்க வேண்டும். மற்றும் கோயில்கள், மடங்கள் பற்றிய சகல முக்கிய விஷயங்களிலும் ஆலய நிர்வாக விஷயங்களிலும் இறுதி முடிவு எடுக்கும் அதிகாரமும் இந்த டிரிபியூனலுக்கே இருக்க வேண்டும்; ஆணையாளரின் உத்தரவு காரணமாக ஏதேனும் சிக்கல்கள் எழுந்தால் டிரிபியூனலே அவற்றை விசாரித்துத் தீர்க்க வேண்டும்; அரசாங்கம் இதில் தலையிடக் கூடாது. — இவையெல்லாம் ஸி.பி. கமிஷனின் பரிந்துரையாகும். இப்பரிந்துரைகள் ஏற்கப்பட்டாலொழிய அறநிலையத் துறையில் தலைவிரித்தாடும் அரசியல் அதிகார துஷ்பிரயோகங்களையும்ஊழல்களையும் அகற்றவே முடியாது.

கே: மடாலயத் தலைவர்கள் பரம்பரை அறங்காவலர்கள் பற்றிய விஷயங்களில் வெளித் தலையீடு அவசியமா, நியாயமா?

ப: தலையிடும் உரிமையை விட, பாதுகாக்கும் பொறுப்பையே ஸர் ஸி. பி. யின் பரிந்துரை வலியுறுத்துகிறது. உதாரணமாக 1981 இல் ஸ்ரீரங்கம் கோயில் கும்பாபிஷேகம் நடந்தபோது அக்கோயிலின் பரம்பரை அறங்காவலரான ஜீயர் சுவாமிகள், ஆகம நியதிக்குப் புறம்பாகச் சில விஷயங்கள் செய்யப்படுவதை ஆட்சேபித்தார். இதற்காக இந்து அறநிலையத் துறை ஆணையரால் அவர் சஸ்பெண்ட் செய்யப்பட்டார்! அவர் உணவு அருந்திக் கொண்டிருக்கும் போதே, ஆணை வந்த ஐந்தாவது நிமிடம், கோயில் ஊழியர்கள் அவரை உள்ளே வைத்து, வெளிக்கதவைப் பூட்டிவிட்டுப் போய்விட்டார்கள்! மடாதிபதிகளைப் பதவியிலிருந்து நீக்கும் அதிகாரத்தை ஆணையர் மூலம் அரசாங்கத்திற்கு வழங்கும் சட்டத்தை 1982 இல் திருத்தச் சட்டமாகக் கொண்டு வந்தார் ஆர். எம். வீ. இதன்படி அற்பக் காரணங்களுக்காகக் கூட அரசால் மடாதிபதிகளை நீக்க முடியும்! மடத் தலைவர்களை வெறும் பொம்மைகளாக மாற்றியிருக்கக் கூடிய இச்சட்டத் திருத்தம் என் எதிர்ப்பை மீறி நிறைவேறிற்று. ஆனால் வணக்கத்துக்குரிய சங்கராச்சாரிய சுவாமிகளும் மற்ற மடாதிபதிகளும், சமய உணர்வு மிக்கப் பெரியோர்களும் ஒன்று கூடி குடியரசுத் தலைவரிடமும் தலைமை அமைச்சரிடமும் இச்சட்டத்திற்கு அங்கீகாரம் அளிக்கப்படக் கூடாது என்று விண்ணப்பித்தனர். அதன் விளைவாக இச்சட்டத்திற்கு அங்கீகாரம் அளிப்பதை மத்திய அரசு நிறுத்தி வைத்தது! இதையெல்லாம் எதிர்பார்த்து, தீர்க்க தரிசனத்துடன்தான் ஸர் ஸி. பி. தமது பரிந்துரைகளை வழங்கியுள்ளார்.

கே: சமீப காலமாகத் தமிழ்நாட்டுக் கோயில்களில் தங்கத் தேர் செய்யும் திருப்பணிகள் அதிகரித்து வருகின்றன. இவை தேவைதானா?

ப: இவை அவசியம்தான் என்றாலும், இந்தத் தேர்கள் பக்தர்களின் காணிக்கையைக் கொண்டே செய்யப்பட வேண்டும். மாறாக ஆலயங்களில் ஏற்கெனவே உள்ள தங்க நகைகளையோ அல்லது தங்கக் கட்டிகளையோ உருக்கி இத்தகைய தேர்கள் செய்வது தவறு. தேர்கள் செய்வதற்கு அளிக்கப்படுகிற தங்கம் முழுவதுமே பயன்படுத்தப்படுகிறதா என்பதைக் கண்டறிவது யாராலும் இயலாத காரியம். அதைப் போல் ஆலயங்களில் உள்ள நகைகளில் வைரம், முத்து நகைகள் ஏராளமாக உள்ளன. இவற்றின் மதிப்பு இவற்றின் அளவை மட்டுமின்றி பழமையையும் பொறுத்த விஷயம். இவற்றில் ஏதேனும் மாற்றப்பட்டுச் செயற்கை வைரங்களோ முத்துக்களோ வைக்கப்பட்



பழமை வாய்ந்த கோயிலைத்தான் கள்வர்கள் குறிவைக்கிறார்கள். இவற்றிலிருந்து விக்கிரகங்களும், ஆபரணங்களும் களவாடப்படும்போது அவற்றைப் பற்றிய தகவலே வெளிவருவ இல்லை.

நாடாளுமன்றத்தில் அறிவிக்கப்பட்டபடி களவுபோன விக்கிரகங்களின் பட்டியல் இது:

1980 ஆம் ஆண்டு — 113 சிலைகள்
1981 ஆம் ஆண்டு — 104 சிலைகள்
1982 ஆம் ஆண்டு — 112 சிலைகள்
1983 ஆம் ஆண்டு — 98 சிலைகள்
1984 ஆம் ஆண்டு — 103 சிலைகள்
1985 ஆம் ஆண்டு — 116 சிலைகள்
1986 ஆகஸ்டுவரை—36 சிலைகள்

ஆக மொத்தம் 682 சிலைகள் களவாடப்பட்டுள்ளன. இவற்றின் குறைந்த பட்ச மதிப்பு சுமார் 10 கோடி ரூபாய் இருக்கும்.

கடந்த ஐந்து ஆண்டுகளில் சராசரி மூன்று நாட்களுக்கு ஒரு சிலை வீதம் களவு போயிருக்கிறது. இந்த நிலைமை தொடருமானால் இன்னும் சில ஆண்டுகளில் தமிழகக் கோயில்களில் விக்ரகங்களே மிஞ்சாது.

டால் அதைக் கண்டுபிடிப்பது கடினமாகும். இதனால்தான் முன்காலத்தில் கோயில் நகைகள் செய்த பொற்கொல்லர்கள் கோயில் மண்டபங்களிலேயே அமர்ந்து, பொது மக்கள் பார்வையிலேயே அவற்றைச் செய்தார்கள். அன்றுடம் அவர்கள் வேலை முடித்த பிறகு அவர்கள் அமர்ந்த இடத்தைப் பெருக்கி அந்தத் தூசியைக் கூடப் பத்திரமாக எடுத்து வைப்பார்கள் — அதில் தங்கத் துகள்கள் கலந்திருக்க வாய்ப்பு உண்டு என்பதால்! ஆனல், இன்றே பொதுச் சொத்துக்கும் கோயில் சொத்துக்கும் அரசு மதிப்பளிப்பதேயில்லை. நினைத்த மாத்திரத்தில் சிலைகளைக் கண்காட்சிப் பொருள்களாகக் கொண்டு போய் வைக்கிறார்கள். அவை திரும்பி வரும்போது அவற்றுக்குப் பதில் போலிச் சிலைகளைக் கொண்டு வைப்பது வெகு சுலபம். மேலும் கோயில் நகைகளும் வாகனங்களும் பல பக்தர்களால் இறைவனுக்கு வழங்கப்பட்டவை. அவையும் வழிபாட்டுப் பொருள்களே. தெய்வத்தை நகைகளால் அலங்கரித்து, வாகனத்தின் மீது அமர்த்தி வழிபடுகிறார்கள். இப்படிப்பட்ட வழிபாட்டுப் பொருட்களைக் காட்சிப் பொருட்களாக்கிக் கொச்சைப்படுத்துவது மிகக் கேவலம்.

கே: ஸ்ரீரங்கம் கோயிலில் ஏ. சி. கார் வாங்கியதைப் பெரிய விவகாரமாக்கிக் கேள்விகள் எழுப்பினீர்களே?

ப: ஆமாம். அரங்கநாதர் நிச்சயமாக அதை உபயோகிக்கப் போவதில்லை என்று சட்டசபையில் சொன்னேன். அப்போதைய அறநிலையத் துறை அமைச்சருக்கு (ஆர்.எம்.வீ.) என் மீது ரொம்பக் கோபம். தமக்குச் சொந்தமாக ஏ. சி. கார் இருப்பதாகவும் தமது வீட்டில் நான்கு ஏ. சி. மிஷின்கள் இருப்பதாகவும் கூறினர்! 'அமைச்சர் ஏ.சி. காரில் போவதில் எனக்குப் பொருமை இல்லை. ஆனல் ஆலயப் பணத்தில் ஏ. சி. கார் வாங்குவதைத்தான் பலமாக ஆட்சேபிக்கிறேன்' என்றேன். இந்தப் பிரச்னையைச் சட்டமன்றத்தில் எழுப்பியபோது மூன்று அமைச்சர்கள் மூன்று விதமாகப் பதில் சொன்னார்கள். அறநிலையத் துறை அமைச்சர், இந்தக் காரை நிர்வாக அதிகாரியும் அமைச்சர்களும் அவசியம் காரணமாக உபயோகிக்கிறார்கள் என்றார். வருவாய்த் துறை அமைச்சரோ, 'அமைச்சர்கள் இந்தக் காரை ஒரு போதும் உபயோகிப்பதில்லை' என்றார். ஆளுநரையும் முதலமைச்சரையும் தவிர வேறு யாரும் ஏ. சி. கார் உபயோகிக்கக் கூடாது என்ற அரசாங்க ஆணையைச் சுட்டிக் காட்டியபோது முதலமைச்சர் எழுந்து, 'இந்த விதிக்கு எதிராக ஏதேனும் நடந்திருந்தால் விசாரிக்கிறேன்' என்று கூறினார். ஆக மூன்று பேரும் மூன்று விதமான பதில்களை ஒரே நேரத்தில் சொன்னார்கள்.

கே: கோயில்கள் பராமரிப்பு, பாதுகாப்பு விஷயத்தில் நீங்கள் இவ்வளவு ஆர்வம் காட்டக் காரணம் என்ன?

ப: தமிழ்நாட்டுக் கோயில்கள் இந்து



சமயத்தவர்களுக்கு மட்டும் சொந்தமானவை யல்ல. அவை தமிழ்நாட்டின் கலைச் செல்வங்கள். பழம்பெரும் பாரத நாட்டின் பெருமையை உலகுக்கு எடுத்துக் காட்டும் புராதனச் சின்னங்கள். எனவே தமிழர்கள், எச்சமயத்தவர்களாக இருந்தாலும் சரி, அனைவரும் ஒன்றுபட்டு நின்று நம்முடைய ஒப்பற்ற கலைச் செல்வங்களைப் பாதுகாப்பதற்குத் தகுந்த நடவடிக்கைகளை உடனடியாக எடுக்காவிட்டால், கோயில்கள் ஊழல் பெருச்சாளிகளின் கூடாரங்களாக மாறி விடும். இணையற்ற இந்த ஆலயங்களைத் தமது கடுமையான உழைப்பினாலும், அறிவுத் திறமையினாலும் உருவாக்கி நம்மிடம் ஒப்படைத்துச் சென்ற நம்முடைய முன்னோர்களின் நோக்கம் சிதைந்துவிடும்.

— நமது நிருபர்கள்

நெடுமாறன் புகைப்படம், மேலட்டை வண்ணப்படங்கள்: யோகா

# நியூட்ராமுல் சக்தி






க்ரீம் வளம்கொழிக்கும் அமுல் பால், நலம் தரும் மால்ட், இன்சுவைமிக்க கோக்கோ, குமரகம் ! இவற்றின் நற்பயன்களைத் தான் வலியூட்டுகிறது நியூட்ராமுல். எதனாலும் மிஞ்சமுடியாத நயவிலையிலே கிடைக்கிறது !

| | 1000 gms. | 500 gms. | Refil. |
|---|---|---|---|
| நியூட்ராமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.



விற்பனை சிறப்பாளர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெடரேஷன் லிட்.,
ஆனந்த்-388 001.

## நியூட்ராமுல்

விளங்குங்கள் நியூட்ராமுல் வஸ்தாத்தாக

daCunha/GCM/135/86 TAM




ஒழிஞ்சான், பய வி.பி.சிங்!.. ஜோலியோ ஜோலி!

இந்தியப் பண முதலைகள்

ஐயோ! வி.பி.சிங்குக்கு நிதி மந்திரி பதவி போயிடிச்சே!

கண்ணீரைத் துடைங்க! பிடியுங்க! ஒண்ணுக்கு நாலு கைக்குட்டை!

தமிழ்நாடு அல்ல: ஆந்திராவிலிருந்து வந்த விஷ சாராயம்

எட்டு பேர் தான் சாவு

இந்தியப் பொருளாதாரம்





# கல்கி

1987 பிப்ரவரி 8
மலர் 45 இதழ் 28
அக்ஷய தை 26



## காதுல பூ! — பிரதமர் சுற்றியது!

"நிதி அமைச்சராக இருந்தபோது எவ்வளவு கண்டிப்புடன் நடந்து கொண்டாரோ அதே அளவு கண்டிப்புடன் பாதுகாப்பு அமைச்சர் என்ற முறையிலும் வி. பி. சிங் நடந்து கொள்வார்" என்று பிரதமர் சொன்னதில் நமக்குத் திருப்தி ஏற்படவில்லை. பாதுகாப்புத் துறைக்கு அவர் மாற்றப்பட்டது ஒரு நெருக்கடி நிலை உருவாகியிருப்பதால்தான் என்றும் இந்நிலைமையைச் சமாளிக்க ஒரு திறமைசாலி தேவை என்றும் ஒரு விளக்கம் பத்திரிகைகள் மூலம் பரப்பப்படுவது நமக்குச் சமாதானம் அளிக்கவில்லை. 'நிதி இலாக்காவை வேறு ஒருவரிடம் ஒப்படைத்தால்தானே வி. பி. சிங்கின் தகுதியைச் சந்தேகித்ததாகும்? எனவே நாமே வைத்துக் கொண்டு விடலாம்' என்ற ராஜீவின் முடிவு அவரைத் தந்திரசாலியாகக் காட்டுமே தவிர, திறமைசாலி என உணர்த்தாது. இந்தியக் குடிமகனின் காதில் பூ சுற்றுகிற காரியம்தான் இது.

உண்மை என்ன? நமது நாட்டிலே பணமுதலைகள் மிகுதி. ஏன், பணத் திமிங்கிலங்களே உள்ளன. இவர்கள் பர்மிட் — லைசென்ஸ் கொள்கையினால் கொழுத்தவர்கள்; அதிகார வர்க்கத்துக்கும் அரசியல்வாதிக்கும் வாய்க்கரிசி போட்டே வளர்ந்தவர்கள்; வரி ஏய்த்துக் கறுப்புப் பணத்தில் மிதப்பவர்கள்; ஸ்விஸ் வங்கியில் அந்நியச் செலாவணியில் பணமூட்டைகளை அடுக்குகிறவர்கள்.

வி. பி. சிங் என்ன செய்தார்? 'வரிகளைக் குறைக்கிறேன்; ஆனால் இனி வரி ஏய்ப்பை அனுமதிக்க மாட்டேன், கறுப்புப் பணம் உருவாக விட மாட்டேன்' என்றார். 'கண்ட்ரோல்களைத் தளர்த்துகிறேன், ஆனால் இனி தகிடு தத்தங்களைப் பொறுக்க மாட்டேன்' என்றார். 'திமிங்கிலமோ, முதலையோ, கருமீனோ யாரானாலும் சட்டத்துக்கு முன் சமம்' என்றார். 'என்னைத் தனித்தனியே சந்திக்க வராதீர்கள்; தொழிலதிபர்கள் பலர் ஒட்டு மொத்தமாய் ஒரே சமயத்தில் உங்கள் குறைகளை எடுத்துக் கூற வாருங்கள்; பேசுவோம்' என்றார். இதன் மூலம் ஒளிவு மறைவுக்கும் இடமில்லை, லஞ்ச ஊழலுக்கும் வழியில்லை என்று நிரூபித்தார். 'அரசியல் காரணங்களுக்காக உற்பத்திக்கு உதவாத செலவினங்களை அதிகரித்துக் கொண்டே போவது தவறு' என்று அரசாங்கத்துக்கும் சிரிய அறிவுரை வழங்கினார். 'அரசியல் ரீதியில் அரசுத்துறை அவசியம்தான்; அவைதாம் தனியார் துறை பணமுதலைகளின் கொட்டத்தைக் கட்டுக்குள் அடக்க முடியும்; இதற்காகவே அரசுத்துறை, திறம்பட இயங்கி, லாபம் ஈட்டியே ஆக வேண்டும்' என்று எச்சரித்தார்.

பார்த்தார்கள் பணமுதலைகள். 'ஏது இந்த ஆள் நம்மைப் பணம் குவிக்க விட மாட்டான் போலிருக்கிறதே' என்று அஞ்சினார்கள். பர்மிட் லைசென்ஸ் இருந்தால்தானே, வரிச் சுமை கூடவே ஏற்றப்பட்டால்தானே, ஏக போக்கியம், அபரிமித லாபம், வரி ஏய்ப்பு, கறுப்புப் பண உற்பத்தி ஆகிய அனைத்துக்கும் வசதி? வி.பி. சிங்கோ, ரெய்டுகளை நடத்தி, மோசடி மன்னர்களின் அஸ்தியில் புளியைக் கரைத்துக் கொண்டிருந்தார். எனவே பண மூட்டைகள் தங்கள் கைவரிசையைக் காட்ட ஆரம்பித்தார்கள். முணுமுணுப்புக்களாக ஆரம்பித்து, முறையீடுகளாகத் தொடர்ந்தார்கள். சில மந்திரிகளையும் கிளப்பி விட்டு, வெளிப்படையாக இல்லாவிட்டாலும் அமைச்சரவைக்குள்ளேயே கிசுகிசுக்கச் செய்தார்கள். 'ரெய்டுகள் பற்றிப் பிரதமருக்கே அதிருப்தி' என்று செய்திகள் பரப்பப்பட்டன. இந்தச் சதியில் பிரதமர் சிக்கியிருக்க வேண்டாம்; நமது மதிப்பிலும் விழுந்திருக்க வேண்டாம். ஆனால் நாட்டின் துரதிர்ஷ்டம், ஜியா, 'டெஸ்ட் மாட்ச் பார்க்க இந்தியா வருகிறேன்' என்கிறார். பிரதமரோ, 'பாக் எல்லையில் யுத்த அபாயம்' என்று கூறி, வி.பி. சிங்கைப் பாதுகாப்பு அமைச்சராக்கி இருக்கிறார்!

பண்பாடு கருதி வி.பி. சிங் வாய் திறக்காமல் இருக்கலாம். ஆனால் நாம் ஏன் தயங்க வேண்டும்? நாட்டுக்கு நல்லது செய்த ஒரே மனிதர் அதற்காகத் தண்டிக்கப்பட்டு விட்டதாகவே கருதுகிறோம். உண்மையிலேயே போர் மேகங்கள் சூழ்ந்திருப்பதாக வைத்துக் கொண்டாலும் அதைச் சமாளிக்க அமைச்சரவையில் பிரதமர் உள்பட வேறு பலர் உண்டு. அவர்களில் ஒருவரை, முழு நேரப் பாதுகாப்பு அமைச்சராக்கியிருக்கலாம். ஓர் அவசர ஆலோசனைக்கு வி.பி. சிங்கும் அருகிலேயேதான் இருக்கிறார். இது பிரதமருக்குத் தெரியாதா என்ன? அவர் போட்ட கணக்கே வேறு!

வெங்கடேஸ்வரனுக்கு ஓர் அநாகரிக முறையில் சீட்டுக் கிழிந்தது; வி.எஸ். சாஸ்திரி அவமானப்படுத்தப்பட்டார்; இப்போது வி.பி. சிங் பட்ஜெட்டுக்கு ஐந்து வாரங்களே இருக்கும்போது கேவலமாக நடத்தப்பட்டிருக்கிறார். நாம் ஒரு முடிவுக்குத்தான் வர வேண்டியிருக்கிறது. 'பிரதமருக்குத் தேர்தல் ஜுரம் வந்துவிட்டது; தேர்தலுக்குத் தொழிலதிபர்களின் தயவு தேவைப்படும் என்று கருத ஆரம்பித்துவிட்டார்' என்பதுதான் அந்த முடிவு.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்மியடி பாப்பா — பாரதியார்.

# வரைந்தவர் யார்?


1


3


4


2

தம் அமெரிக்கப் பயணத்தின் போது, சுதந்திர தேவி சிலையைப் பார்த்துவிட்டு வந்த சிலர், இங்கே அதைப் படம் வரைந்துள்ளனர். அவர்கள் யார் யார் என்று கண்டுபிடியுங்களேன். (ஒவ்வொரு படத்திற்கும் மூன்று யூகங்கள் தரப்பட்டுள்ளன.)

முதல் படம்:

(அ) ம. பொ. சி.
(ஆ) அவ்வை நடராசன்
(இ) பண்ருட்டி ராமச்சந்திரன்

இரண்டாம் படம்:

(அ) கோபுலு
(ஆ) ஜெயராஜ்
(இ) தாணு

மூன்றும் படம்:

(அ) சிவசங்கரி
(ஆ) புஷ்பா தங்கதுரை
(இ) லேனா தமிழ்வாணன்

நான்காம் படம்:

(அ) நளினி
(ஆ) ஜெயஸ்ரீ
(இ) அமலா

விடை 54 ஆம் பக்கம்.




திரைவிழாப் படக் கதை — 2

பார்ட்டி முடிந்து, காலியான கோப்பை கள் கழுவும் இடத்திற்குப் போய்விட்டன. இசையின் இரைச்சல் நிறுத்தப்பட்டு, தரையைச் சுத்தம் செய்தாகிவிட்டது.

அலீதா ஆயாசமாய் இருந்தாலும், கணவனைப் பெருமையோடு முத்தமிட்டாள்.

''ரே, உன்னை வெளிநாட்டிற்கு உன் கம்பெனி அனுப்புவதில் எனக்கு எத்தனை சந்தோஷம் தெரியுமா?''



அவள் கண்களில்மின்னும்பெருமிதத்தை ரே ரசித்தான். ''ஐளாரா எங்கே?'' என்றான்.

''தூங்கிவிட்டாள். ரே, நீ ஏன் சந்தோஷமாய் இல்லை?''

''பார்ட்டியின் இடையில் ஒரு டெலி போன் வந்ததே. அலீதா நினைவிருக்கிறதா?''

''ஆமாம்!''

''என் அம்மா போன் செய்தாள். அமெரிக்காவிலிருந்து புறப்பட்டுவிட்டாளாம். நாளை இங்கு வருகிறாளாம். என் ட்ரிப்பை நான் கான்ஸல் செய்தாக வேண்டும்.''

''உன் அம்மாவா?'' அலீதா கணவனின் முகத்தைத் திருப்பினாள். ''இத்தனை வருடங்கள் கழித்து இப்போது திடீரென்று அவளுக்கு என்ன வேண்டுமாம் உன்னிடத்தில்?''

ரே பதில் சொல்லாமல் மேஜை மீது இருந்த அம்மாவின் புகைப்படத்தை எடுத்துத் துடைத்தான்.

''உன் அம்மா என்ன செய்தாள் என்பதை மறந்துவிட்டாயா ரே? பதினாறு வயது மகன் தனியே, என்ன செய்வான் என்று சற்றும் யோசிக்காமல் உன்னை அநாதரவாக விட்டு விட்டுப் போருக்குப் பயந்து ஓடியவள்தானே உன் அம்மா?''

''அலீதா, கடுமையான வார்த்தைகள்.''

''ரே, உன் அம்மாவை ஒரு மாதம் கழித்து வரச் சொல். உன் வேலை உனக்கு முக்கியம். கான்ஃபரன்ஸ் முடிந்து நீ ஊர் திரும்பிய பின் வரச் சொல்....''

''அலீதா டியர், என் அம்மாவும் எனக்கு முக்கியம்...'' ரே விளக்கை அணைத்துவிட்டுப் போர்வைக்குள் புகுந்து கொண்டான்.

# தூசு படிந்த நினைவுகள்

மறுநாள் வீட்டில் ஏராள விருந்தாளிகள். பத்து வருடங்கள் கழித்து நாடு திரும்பும் ரேயின் அம்மாவைப் பார்க்கும் ஆர்வம்.

அலீதா கொஞ்சம் படபடப்பாக உணர்ந்தாள். முதன்முறையாக மாமியாரை நேரில் சந்திக்கப் போகும் பயம். ஏழு வயது மகள் ஐளாராவை அவ்வப்போது நெஞ்சோடு இறுக்கிக் கொண்டாள்.

வாசலில் டாக்ஸி வந்து நிற்கும் சப்தம்.

அம்மா வந்தாள். நெற்றியில் வயதின் கோடுகள். கண்ணோரத்தில் காக்கைக் கால் சுருக்கங்கள். அம்மாவின் பின்னே வரிசையாய் சூட்கேஸ்களும், பார்சல்களுமாக ஒரு ஷோ ரூமையே நிரப்பக் கூடிய அளவு வந்து இறங்கின.

''ரே, என் மகனே....!''

''அம்மா....'' ரே அம்மாவை அப்படியே இறுகக் கட்டிக் கொண்டான். அந்தத் தழுவ

லில் அன்னியோன்யத்திற்குப் பதில் சம்பிரதாயம்தான் அதிகம் இருந்தாற்போல் பட்டது அவனுக்கு.

''அம்மா இது அலேதா, என் மனைவி. இது கிளாரா, எங்கள் மகள்.''

''ஹலோ...''

''வெல்கம் கிராண்ட்மா...'' என்றாள் கிளாரா, பாட்டியைப் பார்த்து.

''கிளாரா டியர் இந்தா, அமெரிக்காவிலிருந்து உனக்காகவே நிறைய சாக்லேட்கள் வாங்கி வந்திருக்கிறேன். உன் அம்மா ஒன்றும் சொல்ல மாட்டாள். வாங்கிக் கொள்....''

''வாங்கிக் கொள் கிளாரா....'' என்று அலேதா ஊக்கினாள்.

''எங்களுக்கு?'' என்றார்கள் சுற்றியிருந்த உறவினர்கள்.

''எல்லோருக்கும் நிறைய வாங்கி வந்திருக்கிறேன். டியாஸ்க்கு டேப்ரிகார்டர், மரியாவிற்கு காமிரா.... இஸபெல்லுக்கு பர்ஃப்யூம்...''

முதல் பெட்டி திறந்து, நிமிடமாய்க் காலியாயிற்று.

''எங்கள் வீட்டுக்கும் ஒருநாள் வாருங்களேன்'' என்று சொல்லிவிட்டு ஒவ்வொருவராய்ச் சாப்பிட்ட கையோடு கிளம்பிப் போனார்கள்.

''மிச்சமிருக்கும் ஐந்து பெட்டிகளில் இருக்கும் பொருள்களெல்லாம் உங்களுக்குத்தான் ரே!''

''அம்மா எனக்குப் பொருள்களில் விருப்பம் இல்லை....''

''பின் எதில்தான் விருப்பம்?''

''சந்தோஷத்தில்.... நிம்மதியில்.....''

''சந்தோஷமாயிருக்கிறாயா ரே?''

''அலேதாவை என் வாழ்வில் சேர்த்துக் கொண்டபின் வெகு சந்தோஷமாய்த்தான் இருக்கிறேன், அம்மா....''

மருமகளை, மாமியார் பார்த்த பார்வையில் முழு திருப்தி இருந்த மாதிரி இல்லை.

''ரே, உன்னோடு நிறையப் பேச வேண்டும் நான்.''

''பேசலாம் அம்மா. அலேதா தன் அம்மா வீட்டுக்கு இரண்டு நாட்கள் போக விரும்புகிறாள்.''

''நான் வந்தது உங்களுக்குத் தொந்தரவு ஏதுமில்லையே?''

''ஓ, நோ... இரண்டே நாட்களில் திரும்பி விடுவேன்...'' அலேதா கிளாராவின் கைப் பிடித்து நடந்தாள்.

தனிமையில் அம்மாவும், மகனும் ஒன்றும் பேசாமல் வெகு நேரம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

''ரே, எனக்குப் பழைய நினைவுகள் எல்லாம் வருகின்றன.''

''எனக்கும்தான் அம்மா....''

''உன் அப்பா வாசிக்கும் கித்தார் எங்கே ரே?''

''..................''

''ரே, ஏன் பேசமாட்டேன் என்கிறாய்?''

''விற்றுவிட்டேன் அம்மா, கித்தார் மட்டுமில்லை, மேஜை, நாற்காலி, அலமாரி, புத்தகங்கள் எல்லாவற்றையும் ஒவ்வொன்றாய் விற்றுவிட்டேன்....''

''ரே, அவை வெறும் பொருள்களல்ல. உன் அப்பாவின் மூச்சு அவற்றில் இருந்தது. அவருடைய வாசம் அவற்றில் இருந்தது...'' அம்மா பதறினாள்.

''என்னுடைய பதினாறாவது வயதில் அப்பாவும் நீயும் இரவோடிரவாகப் புறப்பட்டுப் போனீர்கள். நான் என்ன செய்வேன்? ரொட்டிக்கும் பாலுக்கும் என்னிடம் ஏது பணம்? தவிர....''

''தவிர?''

''இனிமேல் திரும்பியே வரமாட்டீர்கள் என்று அப்போது நினைத்தேன்.''

''ரே, என்னை நம்பு. உன்னை அநாதரவாக விட்டுப் போக வேண்டும் என்று நாங்கள் திட்டம் போட்டுச் செய்யவில்லை. புரட்சி வெடித்து எங்கும் கலவரமாய் இருந்தபோது, போலி பாஸ்போர்ட் எங்கள் இருவருக்கு மட்டும்தான் கிடைத்தது....''

''அம்மா நாம் அதைப் பற்றி விவாதிக்காமல் இருப்பதே நல்லது...'' ரே தன் காயப் பட்ட உணர்ச்சிகளைக் குமுறாமல் அடக்கினான்.

---

• தமிழ்நாட்டிலிருந்து வந்திருக்கும் Film Institute மாணவர்களில் சிலரைச் சந்திக்க நேர்ந்தது.

''என்ன படங்கள் பார்த்தீர்கள்?'' என்று கேட்டபோது,

''கடலோரக் கவிதைகள், சிந்து பைரவி, மௌன ராகம்...'' என்று சொல்லி நிறுத்திவிட்டு, ''சாயந்திரம் ராஜ்கபூரின் ராம் தேரி கங்கா மாலிக்... படம் போகிறோம்'' என்றார்கள்.



கற்றுக் கொள்வதை விடப் பொழுதுபோக்குவது கஷ்டம்தான். இதற்காகவா பாட்டு கூத்திக் கொண்டு தில்லி வந்தார்கள்?

எல்லா மாணவர்களையும் சொல்லவில்லை. சிலர்!

• டிசம்பர் மாதம் திரைவானிலிருந்து திடீரென்று மறைந்து விட்ட அபூர்வ நட்சத்திரம் ஸ்மிதா பாட்டிலுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் இந்தத் திரைவிழாவில் அவர் நடித்த சில படங்கள் சிறப்பாகத் திரையிடப்பட்டன.

''ஒரு நிர்ப்பந்தத்தின்பேரில் நாங்கள் போன பிறகு நீ என்ன செய்தாய் ரே? அதைச் சொல்லு!''

''என்னென்னவோ செய்தேன் அம்மா. நிறைய குடித்தேன். இருப்பதையெல்லாம் விற்றேன். கண்ட கண்ட சகவாசம். திருடினேன். சிறைக்குப் போனேன். அலிதா என் வாழ்வில் குறுக்கிடும்வரை அறுந்த காற்றாடி போல் அலைந்தேன்.''

''ரே, அலிதா பற்றி நான் கேள்விப்பட்டது....?''

''என்ன கேள்விப்பட்டாய்?''

''அவள் ஏற்கெனவே மணமாகி, விவாகரத்துப் பெற்றவள் என்று... கிளாரா அவளுடைய முதல் கணவன் மூலம் பிறந்த குழந்தை என்று.... ரே, நீ ஒரு கன்னிப் பெண்ணைத் திருமணம் செய்திருந்தால் நான் சந்தோஷப்பட்டிருப்பேன்.''

''விதவை, விவாகரத்து இதெல்லாம் இன்றைக்குப் பெரிதில்லை அம்மா. நான் பார்த்தது அலிதாவை. அவளிடம் இருந்த பெண்மையை. என் மீது பிரியமும் நேசமும் காட்டிய அவள் உள்ளத்தை. நாங்கள் சந்தோஷமாயிருக்கிறோம் அம்மா.''

''உங்களுக்குள் சண்டைகளே இல்லையா, ரே?''

''எந்தக் குடும்பத்தில் சண்டை இல்லை...?''

''ரே.... நீல நிறத்தில் ஓர் ஆல்பம் இருந்ததே, அதையும் எறிந்துவிட்டாயா?''

''பரணில் இருக்கலாம் அம்மா...''

''ரே, நான் அந்த ஆல்பத்தைப் பார்க்க விரும்புகிறேன்....''

சிலந்திகளின் நிம்மதியான வாழ்க்கை கலைக்கப்பட்டு, புழுதி படிந்த அந்த ஆல்பம் கொண்டு வரப்பட்டது. அம்மா கண்களில் நீரோடு புரட்டினாள்.

**ச**மையலறையில் நுழைந்ததும் அம்மா கண்களை நாலாபுறமும் ஓட விட்டாள்.

''ரே,எலெக்ட்ரிக்அடுப்பு இன்னும்வாங்கவில்லை? ஒவன்கள் எங்கே? பால் இருக்கிறதா?முட்டைஉண்டா?பிரட்,ஜாம்,பியர்... ரே, நீ வசதியாய் இல்லையா, மகனே?''

''திருப்தியாய் வாழ்கிறோம் அம்மா...''

''நான் உங்களுக்காக வாங்கி வந்த பொருள்களையெல்லாம் திறந்தே பார்க்கவில்லையே, ரே, என் மீது கோபமா?''

''அதெல்லாம் ஒன்றுமில்லை அம்மா. என்ன சமைக்கலாம்? சிக்கன்...?''

''பேச்சை மாற்றுகிறாய். நான் உன் மனைவியுடனும் பேச விரும்புகிறேன் ரே.''

''கல்லறைகளுக்குப் போக வேண்டும் என்றாயே, அலிதாவைத் துணைக்கு அழைத்துப் போ. நான் ஃபோன் செய்து அவளை வரச் சொல்கிறேன்...''

**க**ணவனின் விருப்பத்துக்கு அலிதாவின் அகராதியில் பிரதான இடம் இருந்தது. அவள் அம்மாவை அழைத்துக் கொண்டு கல்லறைகளுக்கு மலர் வளையங்கள் வைக்கப் புறப்பட்டுப் போனாள்.

கதவைச் சாத்திவிட்டு ரே சற்று நேரம் யோசித்தான். ஹாலில் சுவர் ஓரமாக அவள் கொண்டு வந்த பெட்டிகள் அடுக்கப்பட்டிருந்தன.

அம்மா என்ன வாங்கி வந்திருப்பாள்? ஆர்வம் அவனை உந்தித் தள்ள, முதல் பெட்டியைத் திறந்தான்.

உடைகள்! அவனுக்கு விதம் விதமான டெரிலின் சட்டைகள், நவீன டீ ஷர்ட்கள், அலிதாவுக்கு விலை உயர்ந்த கவுன்கள், கிளாராவுக்கு உன்னதமான இழைகளால் தயாரிக்கப்பட்ட ஃபிராக்குகள்....

ஒரு சட்டையை எடுத்து அணிந்து கொண்டான். அடுத்த பெட்டியிலிருந்து, கூலிங் கிளாஸை எடுத்து மாட்டினான். மூன்றாவதிலிருந்து ஷூக்கள், நான்காவதில் இருந்த ஸ்டீரியோ ரிகார்டரை எடுத்து ப்ளேயைத் தட்ட வீடெங்கும் இசை நிறைந்தது.

'லா லல்ல லா....' என்று கூடவே பாடினான். புது உடைகளுடன் நினைத்தபடி நாட்டியம் செய்தான். நொடிக்கொருதரம் கண்ணாடியில் பார்த்துப் பிரமித்தான்.

திடீரென்று அழைப்பு மணி அலற ஆரம்பித்தது.

ஓடிப் போய்க் கதவைத் திறந்தான். மூச்சு சீரானது. அம்மா இல்லை.

நீல உடை அணிந்து ஓர் ஆள் நின்றான்.

''மிஸ்டர் ரே...?''

''நான்தான்.''

''உங்களுக்கு ஒரு பரிசு. எலெக்ட்ரிக் ஸ்டவ், ஒவன்கள், இன்னும் சில பொருள்கள்...''

''யார் அனுப்பியது?''

''உங்கள் அம்மா.''

''மை காட்!''

பார்சல்களை மனிதர்கள் உள்ளே சுமந்து வந்து இன்னொருபுறம் அடுக்க ஆரம்பித்தார்கள்.

எதற்காக இத்தனை அன்பளிப்புகள்?

டெலிஃபோன் கூப்பிட்டது. ஆஃபீஸிலிருந்து பேசினார்கள். ''ரே, நாளைக்குள் உன் முடிவைச் சொல். சேர்மேன் நீ எப்படியும் அந்த வெளிநாட்டு கான்ஃபரன்ஸில் கலந்து கொள்ள வேண்டும் என்கிறார்.''

**அ**ம்மாவும் அலிதாவும் வீட்டிற்குள் நுழையும்போதே புயல்போல் நுழைந்தார்கள். உடனே இரண்டு கிளைகளாகப் பிரிந்து வெவ்வேறு அறைகளுக்குள் மறைந்தார்கள்.

''அலிதா...'' ரே மனைவியின் அறையில் நுழைந்தான். ''என்ன நடந்தது, ஏன் இப்படிப் பிசாசுகள் போல் நடந்து கொள்கிறீர்கள்?''

''உன் அம்மா உன்னைப் பார்த்துவிட்டுப் போக வரவில்லை, ரே...'' அலிதா கோபத்தில் வெடித்தாள். ''உன்னை வாங்கிப் போக வந்திருக்கிறாள். என் முகத்தில் டாலர் நோட்டுகளையும், ஃப்ரிட்ஜையும் எலெக்ட்ரிக் ஸ்டவ்வையும் வீசி எறிந்து உன்னை வாங்கிப்போகவந்திருக்கிறாள். அவள்நிறைய

** பிரபஞ்சத்தின் இசை நமது இதயத்தில் எதிரொலித்தால் அதுதான் கவிதை.

கனவுகளை வளர்த்துக் கொண்டிருக்கிறான், உன்னைப் பற்றி. பையனாய் இருந்தபோது விலகிவிட்டாள். இப்போது நீ மனிதனானவுடன் கையோடு கூட்டிப் போக வந்திருக்கிறாள். இஷ்டமிருந்தால் நீயும் அமெரிக்கா வரலாம் என்று எனக்கும் அழைப்புக் கொடுக்கிறாள். ரே... என்னை விட்டுப் போய்விட மாட்டாயே...? போகாதே... ரே... போகாதே...!''

''அலீதா... அழாதே... என்ன இது பைத்தியக்காரத்தனம்? நான் போகமாட்டேன். என் அலீதாவைவிட்டுப் போக மாட்டேன்.''

''இளாரா, ரேயின் மகள் இல்லைதானே?'' என்று என்னைக் கேட்கிறாள் உன் அம்மா. தெரிந்தே கேட்டு என் மனத்தைப் புண்படுத்துகிறாள்.''

''வயதானவள். என் அப்பா இறந்தபின் அவளால் தனிமையைத் தாங்க முடியவில்லை. துணை வேண்டும். அவளுக்கு ஒரு குடும்பம் வேண்டும், அலீதா. அதற்காகத்தான் வந்திருக்கிறாள்.''

''பின் இத்தனை பரிசுப் பொருட்கள் எதற்கு?''

''அன்பைக் காட்ட அவளுக்கு வேறு வழி தெரியவில்லை.''

''அன்பு இல்லை விலை....'' — அலீதா படுக்கையில் குப்புற விழுந்து அழ ஆரம்பித்தாள்.

**ரே** மெல்ல அந்த அறையிலிருந்து விலகினான். அம்மாவைத் தேடிப் போனான். ஜன்னலுக்கு வெளியே பார்த்துக் கொண்டிருந்த அவளை மெல்லப் பிடித்துத் திருப்பினான்.

''அம்மா நான் சொல்வதைக் கவனமாகக் கேள். நீ எங்களுடன் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்கலாம். ஆனால் நாங்கள் உன்னுடன் வருவது என்பது நடக்காது. முதல் காரியமாக இந்தப் பரிசுப் பொருள்களை மற்ற உறவினர்களுக்குப் பிரித்துக் கொடுத்து விடு. எனக்கு எந்தப் பரிசும் வேண்டாம்.. அம்மா... நீ இருந்தால் போதும்.''

''நான் இங்கே எப்படி இருக்க முடியும்? உன் மனைவி என்னிடம் நட்போடு பழக மாட்டாள்...'' — அம்மா அவன் பிடியிலிருந்து உதறிக் கொண்டாள்.

''பழகுவாள். அவளை என் மனைவி என்று பார்க்காமல் உன் மருமகள் என்று பார். நான் இங்கே இருக்கும்வரையில், என்னை ஓர் உடைமை மாதிரி இருவரும் நினைத்துச் சண்டை போடுகிறீர்கள். கொஞ்ச நாட்கள் நான் விலகி இருக்கப் போகிறேன். நான் திரும்பும்போது இங்கே நம் குடும்பம் இருக்குமா இல்லை என் குடும்பம் இருக்குமா என்பது தெரிந்துவிடும்...''

ரே மெல்ல டெலிபோனை நெருங்கி, டயல் செய்தான்.

''கான்ஃபரன்ஸில் கலந்து கொள்ள நான் இஷ்டப்படுகிறேன். நானேயே டிக்கெட்டிற்கு ஏற்பாடு செய்யுங்கள்.''

— ஜெயமன் மதன்

Lejania எனும் கியூபா நாட்டுப் படம், பெற்றோர்களின் சுயநலத்தால் உதாசீனம் செய்யப்பட்ட மகனின் நிர்ப்பந்தங்கள், நிராசைகள், உறவுகளின் அழுத்தில் பிணைப்பட்ட பயங்கள், அவசரங்கள், தன்னலங்கள் — இத்தனையையும் நூறு நிமிடப் படத்தில் கொண்டு வருவது சுலபமல்ல; கூர்மையான வசனங்கள், தத்ரூபமான ரியாக்ஷன்கள் படத்திற்குச் சிறப்பான ஆதாரங்கள். விகிதாசாரம் மாறினாலும் எல்லா தேசங்களுக்கும் சில அடிப்படை உணர்ச்சிகள் பொதுவானவை என்று புரிகிறது.

# சின்னஞ்சின்ன கனவுகள்

15

தங்கராஜ் நந்தகுமாரின் கையை உதறிவிட்டு, பரிமளாவின் முகத்தைச் சுற்றி வட்டம் போட்டிருந்த தலைகளை வெகு ஆவேசமாக விலக்கிவிட்டுக் கீழே சரிந்தான். பரிமளாதான். அவனுக்கே அவனுக்குச் சொந்தம் என்று இதுநாள்வரை வெகு கர்வமாக நினைத்துக் கொண்டிருந்த அவனுடைய பரிமளாதான்.

''பரிமளா! பரிமளா!'' என்று அரற்றினான். அவள் முகத்தருகே தன் முகத்தை வைத்து ''தங்கராஜ் வந்திருக்கேன் பரிமளா, என்னைப் பாரு பரிமளா, என்னைப் பாரு பரிமளா'' என்று கதறினான். முகத்தில் அறைந்து கொண்டான்.

''ஐயையோ எப்படிப் பரிமளா என்னை விட்டுப் போக உனக்கு மனசு வந்தது?''

பரிமளா பதில் சொல்லவில்லை. லேசாக வாய் பிளந்திருந்தாள். அதில் தெரிந்த அரிசிப் பற்கள் தங்கராஜின் மனத்தைக் கவ்விப் பற்றின. அவளது சிறிய உதடுகளில் இன்னும் ரோஸ் நிறம் மிச்சமிருந்தது. கீழுதடில் அவள் பற்கள் அழுந்தியதாலோ என்னவோ ரத்தம் வெளிப்பட்டு அந்த இடம் மட்டும் கறுஞ்சிவப்பாய் இருந்தது. அந்தச் சிறிய மூக்கில் ஒரு ஈ வந்து அமர்ந்தது. நெற்றிப் பொட்டு கலைந்திருந்தது.

அந்தக் கைகள் இன்னும் தந்த வெண்மையுடன் இருந்தன. அந்தக் கைகளில் சிற்சில கீறல்கள் இருந்தன. அந்த வெண்மையான பின்னணியில் கீறலினால் விழுந்த ரத்தக் கோடு தாழை மடலில் செம்பருத்திக் கோடு போல் இருந்தது. தங்கராஜ் அவளை உச்சி முதல் பாதம்வரை பார்த்தான். அவன் ஆசையோடு வாங்கிப் பூட்டியிருந்த கொலுசுகளில் ஒன்று மட்டும் எஞ்சியிருந்தது. அந்தக் கொலுசு முத்துக்களில் நனைந்த நீர் திரண்டு, ஒரே ஒரு முத்தாகக் கீழிறங்க, தங்கராஜ் உடைந்து போனான்.

அந்தக் காலைப் பற்றி அந்தப் பாதத்தை முகத்தில் வைத்துத் தேய்த்துக் கொண்டான்.

அவன் தோளை எதுவோ தீண்ட, திரும்பிப் பார்த்தான். இன்ஸ்பெக்டரின் கழி.

''பாடியைத் தொடாதப்பா. போஸ்ட் மார்ட்டத்துக்குக் கொண்டு போகணும். எழுந்துக்க. எல்லாம் முடிஞ்சப்புறம் பாடியை வாங்கிக்க!''

''எல்லாம் முடிஞ்சு போச்சே. எல்லாம் முடிஞ்சு போச்சே'' என்று எழுந்து கொண்டான் தங்கராஜ். மறுபடி முகத்தில் அறைந்து கொண்டான். தள்ளாடிக் கொண்டே பின்வாங்கினான்.

''மொதலாளி... பார்த்தீங்களா மொதலாளி... பார்த்தீங்களா மொதலாளி...?''

மாயகிருஷ்ணன் முகத்தைத் துடைத்துக் கொண்டார். தங்கராஜின் அருகில் வந்து அவன் தோளைப் பற்றி இறுக்கமாக அணைத்துக் கொண்டார்.

''வருத்தப்படாதேன்னும் சொல்ல முடியலே. அழாதேன்னும் சொல்ல முடியலே. நமக்குக் கொடுப்பினை அவ்வளவுதான்னு நெனைச்சிக்க வேண்டியதுதான்'' என்றார்.

''அதுக்காக இப்படியா மொதலாளி. வாழ வேண்டிய வயசிலேயா?'' தங்கராஜின் வார்த்தைகள், துக்கத்தில், அழுகையில் தோய்ந்து தோய்ந்து பிசிறடித்துக் கொண்டு வெளிப்பட்டன.

''அவளை எதுக்காவது கோவிச்சிட்டியா தங்கராஜு?''

''இல்லீங்களே, ஐயோ இல்லீங்களே. என் ராஜாத்தியை நான் ஏன் கோவிச்சுக்கப் போறேன்?''

''இப்படி ஒரு முடிவைத் தேடிக்கிட்டு இருக்காளேப்பா. நான் வேறே ஊர்ல இல்ல. நேத்து பாண்டியன் கல்யாணமில்லே? நல்ல விஷயத்துக்கு வர முடியலே. கெட்ட சங்கதிக்கு வந்து சேர்ந்திருக்கோம் பாரு.... இன்ஸ்பெக்டர் கொஞ்சம் பொறுங்க.... தங்கராஜ் நீ வா இப்படி.''

சுபா



தங்கராஜ் பரிமளாவைத் தவிர வேறு எந்தச் சிந்தனையுமின்றி அவரைத் தொடர்ந்தான். கூட்டம் ஏகப்பட்ட அனுதாபங்களுடன் அவர்களுக்கு வழியை விட்டது. மாயகிருஷ்ணன் தங்கராஜைத் தம் காரின் பின் ஸீட்டில் அமர வைத்தார். திரும்பிப் பார்த்துச் சூழ்ந்திருந்த முகங்களை அகலச் சொன்னார்.

"தங்கராஜ்" என்றார் பரிவாக.

தங்கராஜ் அவரை ஏறெடுத்துப் பார்த்தான்.

"நிச்சயமா உங்க ரெண்டு பேருக்கும் இடையில் எந்தத் தகராறும் இல்லே?"

"இல்லீங்க... இல்லீங்க."

"பின்னெ எதுக்கு அந்தப் பொண்ணு கெணத்தில குதிச்சி உயிரை விடணும்? ம்ம்?" என்று சற்றுநேரம் சிந்தனை செய்தார்.

"போலீஸ் நடுவில் புகுந்ததுன்னு, போஸ்ட்மார்ட்டம் அது இதுன்னு உன் பரிமளா உடம்பைக் கூறு போட்ருவாங்க தங்கராஜு. பரிமளா உடம்பு முழுசாக் கெடைக்காது. மூட்டையாத்தான் கெடைக்கும்."

"ஐயா, அது மட்டும் வேணாங்க ஐயா. நான் என் பரிமளாவைப் பூவும் பொட்டுமா, அப்படியே முழுசா வழியனுப்பி வெக்கறேன்யா. என் பரிமளா உடம்பை யாரும் தொடக்கூடாதுய்யா. செத்துப் போனாலும் அவ என் ராஜாத்தி."

"இரு முடியுமான்னு பாக்கறேன்," என்றார் மாயகிருஷ்ணன். "டாஷ் போர்டில அந்தத் தோல் பேக் வெச்சிருக்கேன் எடு" என்றார் பக்கத்திலிருந்த ரத்தினத்தைப் பார்த்து.

ரத்தினம் தோல் பையை எடுத்துக் கொடுக்க, அதைத் திறந்து ஆராய்ந்து விட்டு கரன்ஸி மணத்துடன் இருந்த பத்து நூறு ரூபாய்த் தாள்களை எடுத்துத் தங்கராஜின்

மேல்பையில் செருகினார்.

''உன் கல்யாணத்துக்குக் குடுக்கறேன்னு சொன்னேன். கருமாதிக்குக் கொடுக்கிற படியா ஆய்டிச்சி...'' என்று பெருமூச்சு விட்டார்.

''மொதலாளி...'' என்று அவர் மீது சரிந்தான் தங்கராஜ் துக்கம் தாள முடியாமல்.

அவனைத் தட்டிக் கொடுத்தார்.

''ரத்தினம் அந்த இன்ஸ்பெக்டரைக் கூப்புடு. நான் கூப்ட்டேன்னு கூப்புடு. அவரைச் சரிக்கட்டினாத்தான் தங்கராஜுக்குப் பரிமளா உடம்பு முழுசாக் கிடைக்கும்'' என்றார்.

**த**ங்கராஜின் வீட்டில்தான் பரிமளாவுக்கு அத்தனைச் சடங்குகளும் நிறைவேற்றப்பட்டன. கூடத்தில் படுத்திருந்த பரிமளாவை மேற்கூரை வழியாக வந்த சூரிய வெளிச்சம் குளிப்பாட்டியது.

''கலெக்டரு. அண்ணி வந்துட்டா எல்லாம் சரியாயிடும்னு சொன்னேனே கலெக்டரு. இப்பப் பாரு. அண்ணி வந்துட்டா. எந்த மாதிரி வந்திருக்கா பாருடா'' என்று நந்தகுமாரைக் கட்டிக் கொண்டு அழுதான் தங்கராஜ்.

இந்திரா பேச்சு எழாமல் பரிமளாவையே



பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். கண்களில் நீர் தேர்க்கயிறு போல நீண்டு கொண்டே இருந்தது. பரிமளாவின் தற்கொலையை நம்புவது மிகக் கஷ்டமாக இருந்தது. நிஜமாகவா, நிஜமாகவா என்று நெஞ்சு இன்னும் துளைத்துக் கொண்டே இருந்தது.

'என்னை நல்லாப் பார்த்துக்க அக்கா. இனிமே பாக்கறியோ இல்லையோ?' — எந்த வாயால் சொன்னாயடிப் பாவி!

என் சாந்தி முகூர்த்தத்திற்கு வழியனுப்பி விட்டுக் கன்னி கழியாமலேயே நீ போய்ச் சேர்ந்து விட்டாயே பரிமளா.

கன்னிகழியாமலேயே... இப்படி ஓர் எண்ணம் வந்தவுடன் இந்திராவுக்குப் பகீர் என்றது. ஒருவேளை... ஒருவேளை... அப்படியும் இருக்குமோ?

ஃபாக்டரி முதலாளி மாயகிருஷ்ணன் ஏதாவது...

சந்தேகம் எழுந்தவுடன் அவளுக்கு இருப்புக் கொள்ளவில்லை. பாண்டியனிடம் சொல்லிவிட வேண்டும் என்று பரபரத்தாள். சுற்றிலும் கண்களை ஓட்டிப் பாண்டியனைத் தேடினாள். பாண்டியன் யாரோ கொண்டு வந்திருந்த பூமாலையுடன், கையில் ஊதுவத்திப் பாக்கெட்டுடன் தங்கராஜை நெருங்கிக் கொண்டிருந்தான்.

பரபரப்புடன் எழ இருந்த இந்திரா சட்டென்று மனத்தை மாற்றிக் கொண்டாள். பாண்டியனிடம் இந்தச் சந்தேகத்தைச் சொன்னால் என்ன ஆகும்? உனக்கு எப்படி இந்தச் சந்தேகம் என்ற கேள்வி வரும். அப்புறம் அந்தக் கசப்பான விஷயத்தைச் சொல்ல வேண்டி இருக்கும். இத்தனை நாள் மாயகிருஷ்ணனைப் பற்றி ஏன் சொல்லவில்லை என்ற கேள்வி பிறக்கும். மாயகிருஷ்ணனால் இந்திராவிற்கு ஏதோ நிகழ்ந்து விட்டது. அதனால்தான் இந்திரா அந்தக் கல்யாணத்துக்கு ஒத்துக் கொண்டாள் என்று பாண்டியன் நினைத்து விட்டால்? பாண்டியனுக்கும் அவளுக்கும் இடையில் ஒரு நல்ல ஆரம்பம் என்பதே இல்லாமல் போய்விடும். பரிமளா போன துக்கத்துடன், இந்த விஷயமும் சேர்ந்து பாண்டியன் மனத்தை அறுக்கத் தொடங்கிவிடும். சந்தேகங்கள், சிக்கல்கள். மேலும் சிக்கல்கள்.

இந்திரா எல்லாவற்றையும் யோசித்துவிட்டு, மறுபடி ஊமையாகப் போக வேண்டியதை நினைத்துக் கொண்டு மேலும் அழத் தொடங்கினாள்.

**சு**டுகாட்டிற்குப் போகும் போதும் சரி, அங்கே இறுதிச் சடங்குகள் நடக்கும் போதும் சரி, தங்கராஜ் பரிமளாவிடம் பரிபூர்ணமாக வாழ்ந்து கொண்டிருந்தான்.

'வேண்டாங்க. ம்ஹூஹூம் வேணாம்.'

'ஏய் கணுதை வேணாம், வேணாம்னு சொல்லிட்டிருந்தே. அவ்வளவுதான். நான் ஒரேயடியாப் போய்டுவேன்.'

யார் யாரோ தங்கராஜை நெருங்கி அவனுக்கு ஆறுதலாய் அவன் கைகளை ஏந்தி ஏந்திப் பிடித்துத் துக்கம் விசாரித்துவிட்டுப் போனார்கள்.

''**த**ங்கராஜு.''

வீட்டு வாசலில் அழைப்பு கேட்டது. தங்கராஜ் தலையை மட்டும் திருப்பிப் பார்த்தான்.

போஸ்ட்மேன் ராஸ் நின்று கொண்டிருந்தார். இவன் மறுமொழிக்குக் காத்திராமல் உள்ளே நுழைந்தார்.

''எல்லாம் கேள்விப்பட்டேன் தங்கராஜு. கொஞ்ச நேரத்துக்கு முன்னாடிதான் விஷயமே தெரிஞ்சது. நாமளும் ஒருநாள் அங்கே தான் போகப் போறோம். அப்படிப் போறப்ப நீ உன் பரிமளா கூட சேர்ந்துக்கலாம். இப்ப வருத்தப்படாதே. பரிமளா உனக்காக அங்கே காத்துக்கிட்டு இருப்பா. எங்கேயோ ஒரு இடத்தில இருக்கான்னு நெனைச்சுக்க. அழா



தழையைக் கண்ட இடமெல்லாம் ஓடுகிற பசுவைப் போல்,இந்திரிய சௌக்கியத்தைத் தேடி ஓடிக் கொண்டேயிருக்கிறோம் நாம். பசுவின் சொந்தக்காரன் அதைக் கட்டிப் போடுவதுபோல் பசுபதியான ஈசுவரன் நம்மைக் கட்டிப் போட்டிருக்கிறான்.

'எங்கே கட்டியிருக்கிறான், கண்ணுக்குக் கட்டு எதுவும் தெரியவில்லையே' என்று தோன்றும். ஆனாலும் நம்மை அறியாமலே இந்தக் கட்டைப் பற்றி நாம் அவ்வப்போது பேசுகிறோம். ஒரு காரியத்துக்காக நாம் எத்தனையோ முயற்சி செய்கிறோம். அப்படியும் அது பலிதமாகவில்லை; இச்சமயத்தில் 'முடிந்ததெல்லாம் செய்தேன். ஆனால் கர்ம பந்தம் யாரை விட்டது? காரியம் ஜயிக்கவில்லை' என்று சமாதானம் சொல்லிக் கொள்கிறோம். 'பந்தம்' என்பதுதான் கட்டு. நம்முடைய பூர்வ கர்மாவினால் நம்மைக் கட்டியிருக்கிறான் பசுபதி.

கயிற்றால்கட்டப்பட்டபசுவுக்கு,அந்தக் கட்டின் மீது கோபம்தான் வரும். ஆனால் கட்டை அவிழ்த்துவிட்டால் என்ன ஆகிறது? அது அசலான் தோட்டத்தில் மேய்கிறது. அவன் அதை வெளு வெளு என்று வெளுத்துக் கட்டுகிறான். பட்டியில் கொண்டு போய் அடைக்கிறான். அப்போதுதான் பசுவுக்குத் தன்னைக் கட்டிப் போட்டிருந்தது எவ்வளவு நல்லது என்று தெரிகிறது.

இப்படியேதான் கர்மக் கட்டைப் பற்றி, நமக்குக் கோபம் வருகிறது. ஈசுவரன் இப்படி ஒரு கட்டைப் போடாவிட்டால், நமக்குத் தோல்வி, துக்கம் இதெல்லாம் ஏற்படாது. தோல்வியும் துக்கமும் வருவதால்தான் நாம் இப்போது, 'நமக்கு இவ்வளவுதான் பொசிப்பு' என்கிற புத்தியைப் பெற்று, இருக்கிற மட்டும் திருப்தியுடன், நிம்மதியுடன் வாழக் கொஞ்சமாவது முயல்கிறோம்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

---

தேப்பா... அழாதே... உனக்கு ஒரு லெட்டர் வந்திருக்குது. இந்தா.''

தங்கராஜ் அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொள்ளாமல், தபால்காரரையே பார்த்தான்.

''லெட்டரை வாங்கிக்க தங்கராஜ்.''

''என்ன லெட்டர் ராவ். நீங்களே படிச்சி விஷயத்தைச் சொல்லிடுங்களேன்.''

''நீ ஏதோ நகைச் சீட்டு போட்டிருந்தே போல இருக்கே. சீட்டு முடிஞ்சி போய்டுச்சாம். எப்ப வேணும்னாலும் வந்து நகையை வாங்கிக்கலாம்னு நகைக்கடைக்காரங்க எழுதியிருக்காங்க.''

தங்கராஜ் ஏன் குலுங்கிக் குலுங்கி அழத் தொடங்கினான் என்று போஸ்ட்மேனுக்குப் புரியவில்லை.

தங்கராஜ் அந்தக் கடிதத்தை வாங்கி மார்போடு அணைத்துக் கொண்டான்.

''இந்த நகைச்சீட்டு முடியட்டும். தங்கத்தில் தாலி வாங்கி உன் கழுத்தில கட்றேன்னு சொல்லிக் கல்யாணத்தைத் தள்ளித் தள்ளிப் போட்டேனே! தாலி வந்திருக்கிற நேரத்தைப் பார்த்தியா பரிமளா... தாலி வந்திருக்கிற நேரத்தைப் பார்த்தியாடீ தங்கம்...?''

நந்தகுமார் எழுந்து போய்த் தங்கராஜின் கண்களில் மிதந்த கண்ணீரைத் துடைத்துவிட்டான். தங்கராஜ் நந்தகுமாரை இறுக அணைத்துக் கொண்டான்.

போஸ்ட்மேன் எழுந்து வாசலைப் பார்த்து நடந்தார்.

''டேய் நந்து'' என்று கிசுகிசுக்கும் குரலில் அழைத்தாள் இந்திரா.

நந்தகுமார் ஏறிட்டு இந்திராவைப் பார்த்தான்.

''வா, வீட்டுக்குப் போகலாம். அண்ணனைத் தொந்தரவு பண்ணாதே. நம்ம வீட்டுக்குப் போய் ஏதாவது சமைச்சு அண்ணனுக்கும் குடுத்தனுப்பலாம். அண்ணன் காலையில இருந்து ஒண்ணுமே சாப்பிடலை...''

''நீ போ. எங்களுக்கு ஓட்டல் இருக்குது பார்த்துக்கறோம்.''

''அப்படில்லாம் சொல்லாதே கலெக்டரு. அம்மா கூட போ.''

''வாடான்னா... அண்ணனைத் தனியா விடு. ஏங்க, நீங்க கூப்புடுங்களேன்''

''யார் கூப்ட்டாலும் சரி, நான் வரப் போறதில்லை. நான் இனிமே தங்கராஜு அண்ணன் கூடத்தான் இருக்கப் போறேன்'' என்று கூறினான் நந்தகுமார். தங்கராஜை இன்னும் இறுக்கமாக அணைத்துக் கொண்டான்.

(தொடரும்)



## வாழ்க்கை வளம் பெற...

## 4

எங்கே போய்க் கொண்டிருக்கிறோம் என்பது தெரியாமலே பலர் சென்று கொண்டிருக்கிறார்கள். தங்களுக்குள் இருக்கும் திறமைகள் என்ன, தாங்கள் எங்கே பிரகாசிக்க முடியும் என்பதைப் புரிந்து கொள்ளாமலே பலர் ஏதோ கிடைத்த இடத்தில், அகப்பட்ட வேலையில், வாழ்வை ஓட்டிக் கொண்டிருக்கின்றனர்.

நாம் யார் என்பது அவ்வளவு முக்கியமான விஷயமல்ல. ஆண், பெண், வயோதிகர், இளைஞர், கீழ் சாதி, மேல் சாதி, ஏழை, ஊனமுற்றவர் என்பனவை எல்லாம் ஓரளவுக்குத்தான் நமக்கு எல்லை வகுக்குமே ஒழிய அவற்றால் நம்மைச் சிறைப்படுத்த முடியாது. நாம் எங்கே போகிறோம், எதை அடைய விரும்புகிறோம் என்பதுதான் முக்கியம். நமது திறமைகள் என்ன? அவற்றை உபயோகிக்கிறோமா என்று நம்மை நாமே புரிந்து கொள்வதுதான் முக்கியம்.

''கான்வெண்டில் படிக்கும் பெண் போல்; அடக்கத்துடனும், உலகம் அறியாக் குழந்தை நிலையிலும் இருக்கிறார் இந்திரா காந்தி'' என்று எழுதினார் வெல்ஸ் ஹேங்கன் என்ற பிரபல அமெரிக்க நிருபர். அந்த அடக்கம், பயம், அறியாமை என்பனவெல்லாம் நிஜமா என்பதை எண்ணிப் பாருங்கள். ''செய்து முடிப்பேன்'' என்ற திடமனமும், ''நிரூபித்துக் காட்டுவேன்!'' என்று சவால்களை ஏற்கும் குணமும், ''அடைந்தே தீருவேன்!'' என்ற லட்சியப் பற்றும் இருந்தது அவரிடம். எத்தனையோ பெரிய உலக ராஜ தந்திரிகளான நிக்சனையும், கிஸ்ஸிஞ்சரையும், தாட்சரையும், டிகாலேயும், நாசரையும் அவர் சமாளித்தார். இந்திய அரசியலின் பழம் பெருச்சாளிகளும், புது முதலைகளும் விடுத்த சவால்களை அவர் ஏற்றார்.

இன்றைய தமிழ்நாட்டு முதல்வரைக் கவனியுங்கள். எம்.ஜி. ஆருக்குநாட்டைப்பற்றிய தெளிவு இல்லை; தன்னைப் பற்றிய தெளிவு இருந்தது. அதை எப்படி உபயோகித்துத் தன் புகழை, தான் விரும்புவதைச் சாதித்துக் கொள்ளலாம் என்ற தெளிவு இருந்தது. இதன் விளைவாகத் தன் செல்வாக்கை நிலைநிறுத்திக் கொண்டு பதவியில் இருக்க முடிகிறதே தவிர தமிழ்நாட்டுக்கு—தமிழ்நாட்டின் நிகழ்காலத்துக்கோ, வருங்காலத்துக்கோ — ஏதும் நன்மை தருவதாய் அவர் ஆட்சி அமையவில்லை.

எஸ்.டி.எஸ். தமது பலம் எது, எங்கிருக்கிறது என்பதை உணராமல் அரசியலில் புதுக் கட்சி துவங்கினார் என்று சொல்வது தவறாகுமா? எல்லோருக்கும் தெரிந்த பெரிய மனிதர்கள் எதைத் தங்கள் லட்சியம் என்று பேசுகிறார்கள் என்பதையும் அந்த லட்சியத்தை அடைவதற்கு அவர்களுக்குள்ள திறமைகளையும், இரண்டையும் இணைக்க அவர்கள் உருவாக்கும் திட்டங்களையும், மூன்றாம் மனிதராக நின்று ஆராயுங்கள். வெற்றி பெற்றவர்களையும் தோல்வியடைந்தவர்களையும் எடுத்துக் கொண்டு ஆராயுங்கள். இது ஒரு நல்ல பயிற்சி. ஒரு தாளில் எழுதிப் பாருங்கள். பின்னால் நம்மைப் பற்றியும் ஒரு மூன்றாம் மனிதனாக நின்று ஆராய இது வழிகாட்டும்.

எம்.ஜி. ஆரைப் பற்றியோ, எஸ்.டி.எஸ். பற்றியோ நான் காணும் முடிவுகளை நீங்கள் ஏற்றுக் கொள்ளலாம்; ஏற்காமல் போகலாம். அது அல்ல முக்கியம். நம் திறமைகளுக்கேற்ற லட்சியத்தில் இறங்க வேண்டும் என்பதும், அல்லது நமது லட்சியத்திற்கேற்ப திறமைகளை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பதும் இவற்றிலிருந்து புரியும்.

தங்களது திறமைகளையும், ஆர்வங்களையும் புரிந்து கொள்ளாமல் வழக்கறிஞர்களாக இருக்க வேண்டியவர்கள் வியாபாரிகளாகவும், போலீஸ் அதிகாரிகளாக இருக்க வேண்டியவர்கள் மருத்துவர்களாகவும், பகல் கொள்ளைக்காரர்களாக் இருக்க வேண்டியவர்கள் அரசியல்வாதிகளாகவும் இருப்பதைப் பார்க்கிறோம். கட்டுப்போட்டாலும் கணக்கு வராதவர்கள், அக்கவுண்டண்டாகப் போனால் எப்படி? ஒரு பெண், ''யாருக்காவது தலையை நீட்டி, குழந்தை குட்டிகளைப் பெற்றுக் கொண்டு வாழ வேண்டும்'' என்று நினைக்க எப்படிப் பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறாளோ, அதுபோல் ஏதாவது ஒரு வேலை பார்த்துப் பிழைப்பு நடத்த வேண்டும் என்று பெரும்பாலோர் சிந்திக்கவும், செயல்படவும், வாழ்க்கை நடத்தவும், பழக்கப்படுத்தப்பட்டிருக்கிறோம்.



# திறமைகள் மலரட்டும்!

பள்ளங் கண்ட இடத்தில் ஓடும் தண்ணீர் போல் நடந்து கொள்ளும் இப்பழக்கம் நமது சிந்தனைச் சிறகுகளை ஒடித்துவிட்டிருக்கிறது.

எங்கள் ஊர் ராமசாமிக்கு ஓர் அண்ணன் இருந்தான். கோவிந்தசாமி என்று பெயர். கோவிந்தசாமி பெரிய விளையாட்டு வீரன்; பெரிய உடல்வாகு — அதற்கேற்ற பயிற்சி — அதில் ஈடுபடும் ஆர்வம். ராமசாமிக்கோ தானும் அண்ணனைப் போல் பெரிய விளையாட்டு வீரனாய் வர வேண்டுமென்ற ஆசை. ஆனால் அதற்கேற்ற உடல் ஆகிருதி இல்லை. அண்ணனைப் போல் பயிற்சி செய்யப் போதுமான நேரமும் கிடைக்கவில்லை. ஆகவே ஒவ்வொரு விளையாட்டுக் கும்பலிலும் முயன்று பார்த்துத் தோற்றுக் கொண்டிருந்தான். "அண்ணன் வழியில் செல்ல — தான் ஒரு கோவிந்தசாமி அல்ல!" என்று புலப்பட ராமசாமிக்குக் கொஞ்ச காலமாயிற்று. ராமசாமிக்குப் படிப்பில் ஆர்வம். நன்கு படித்தான், பேராசிரியரானான். பாடம்: 'அண்ணன் வழியில் செல்ல முயலாதீர்கள்! அப்பன் வெட்டிய கிணறு என்று உப்புத் தண்ணீரைக் குடிக்காதீர்கள்!'

நாம் எதில் திறமை கொண்டிருக்கிறோம் என்பது, சில சமயம் பிறரால் பாராட்டப்படும்போதுதான் நமக்கே புரிகிறது. நமது பள்ளிக்கூடங்களில் எதைத் தப்பாய்ச் செய்திருக்கிறோம் என்று திருத்துகிறார்களே ஒழிய, நாம் நல்லதாய்ச் செய்ததற்காக அதிகம் பாராட்டப்படுவதில்லை. விளைவு: பள்ளிப் படிப்பு நமக்கு வழிகாட்டுவதற்குப் பதிலாக, நமது குறைபாடுகளைப் பெரிதாக்கிக் காட்டுவதையே தலையாய கடமையாகக் கொண்டிருக்கிறது. நமது வாழ்க்கை எப்படி சிறக்கும்?

சிலசமயம் நாம் நாமாக இருக்கப் பயப்படுகிறோமோ என்ற சந்தேகம் ஏற்படுகிறது. இரண்டு அங்குலம் உயரம் குறைவாக இருப்பதனால் நீங்கள் போலீசில் சேர முடியாமல் போகலாம். ஆனால் அதனால் நம் உலகம் இருண்டு போய்விடப் போவதில்லை என்ற மனோபாவம் நமக்கு ஏற்பட வேண்டும். "நான் உளறிக் கொட்டினேன்!" என்று தன்னைத் தானே திட்டிக் கொள்ளும் மனோபாவத்தை மாற்றி "எனக்குப் பேசும் திறமை இருக்கிறது. அதைச் சரிவரப் பயன்படுத்துவேன்!" என்று சிந்திக்க நாம் பழகுவது நல்லது.

தமிழ்நாட்டில் சினிமாத்துறையில் ஈடுபட விரும்புகிறவர்களும், அரசியலில் ஆதாயம் தேட முனைபவர்களும் அதிகம் இருக்கிறார்கள் என்றால், காரணம், அதில் மட்டுமே அதிக திறமை கொண்ட மக்களைத் தமிழ்நாடு பெற்றெடுத்துவிட்டது என்று அர்த்தமல்ல. மக்கள்முன், இந்த இரு துறைகளும் தான் எல்லோருக்கும் தெரியும்படியும் புரியும்படியும் செய்யப்பட்டிருக்கிறது. பண வருவாய் செய்பவர்களது சொர்க்கபூமியாக இத்துறைகள் பொதுமக்களால் கணிக்கப்படுகிறது. இந்தத் துறைகளில் உள்ளவர்கள் எத்தனையோ பேர், தொழிலிலோ, வாணிபத்திலோ, விஞ்ஞானத் துறைகளிலோ புகுந்திருந்தால் அங்கும் பிரகாசித்திருக்க முடியும். இன்னும் எவ்வளவோ பயன் தரத்தக்க, நிறைவு தரத்தக்க, சவால்களைச் சமாளித்திருக்க முடியும். மக்கள் தங்கள் திறமைகளைப் பூரணமாக உணராமைதான் ஓரிரு துறைகளில் மட்டும் கூட்டம் சேரக் காரணம். மற்றொரு காரணம் 'சாயுற பக்கமே சாயுற செம்மறியாட்டுப் புத்தி.

ஏராளமான பேர் இன்று புதுக் கவிதை எழுதுவதைக் காண்கிறேன். வரவேற்போம்; ஆக்க சக்தி பொங்கிப் பிரவகிக்கட்டும்! ஆனால் உங்களது பிற திறமைகளையும் கண்டு பிடியுங்கள், வெளிக்கொணர முயலுங்கள் என்றுதான் சொல்ல ஆசைப்படுகிறேன்.

இதே நோக்கில் அமெரிக்காவைப் பார்த்தால், சொந்தத் தொழில் செய்து பிழைப்பவர்களையும் பணக்காரரானவர்களையும்தான் அதிகம் காணலாம் — மற்றெல்லா நாடுகளையும்விட 42 சதவிகித மாணவர்கள் எடுத்துக் கொள்ளும் பாடம் தொழில், வியாபாரம் சம்பந்தமான படிப்புத்தான். அமெரிக்கா ஏன் பணக்கார நாடாயிருக்கிறது என்பதற்கு நாம் மிகப் பெரிய ஆராய்ச்சி செய்ய வேண்டியதில்லை.

நமது ஆர்வங்களை நாமே தட்டி எழுப்ப வேண்டும். "எங்கே நமது ஆர்வம் இருக்கிறதோ, அங்கே நமக்குத் திறமை இருக்கிறது. அந்தத் திறமை இருப்பதனால்தான் அந்த ஆர்வமே எழுந்தது" என்று நெப்போலியன் ஹில், ஜேம்ஸ் ஆலன் போன்றோர் கூறுகிறார்கள்.

தறி நூல் விற்பவராக வாழ்வைத் துவங்கிய வட இந்தியத் தொழிலதிபர் அம்பாணியைப் பாருங்கள். எத்தகைய தொழில் அதிபராக உலகின் கவனத்தை ஈர்க்கிறார் என்பதைக் கவனியுங்கள். இந்தியாவில் எத்தனையோ அம்பாணிகள் இருக்கிறார்கள். அவர்கள் தங்கள் திறமையைப் புரிந்துகொண்டார்கள். தங்கள் ஆர்வத்தை அறிந்து கொண்டார்கள். அதன் பின்னால் போனார்கள். 'பசி நோக்கார், கண் துஞ்சார், எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார், கருமமே கண்ணாயினார்' என்பது போல.

இந்த லட்சிய தரிசனத்தை வேறு பலர் காண முடியாமல் எது மறைக்கிறது? மூட நம்பிக்கை, பயம், அவநம்பிக்கை என்ற கறுப்புக் கண்ணாடி.

இன்றைய வாழ்வு நிலை பற்றி நாம் நொந்துகொள்ள வேண்டிய அவசியமில்லை. நமக்கு இருக்கும் எல்லைக் கோடுகளைப் பற்றி வருத்தப்பட வேண்டிய அவசியமில்லை. எல்லைகள், வரையறைகள் — நமது படிப்பு, நாம் வாழும் இடம், வயது எல்லாம் ஓரளவு தான் மனிதனைக் கட்டுப்படுத்தும். அதற்குள்ளும் மனிதன் சுதந்திரமாகச் செயல்பட முடியும். அந்த சுதந்திர மனம் எல்லைகளைத் தாண்டிப் பறக்க முடியும்.

நாம் ஒவ்வொருவரும் ஒரு காரணத்திற்காகச் சில திறமைகளுடன் படைக்கப்பட்டிருக்கிறோம். நமது திறமைகள் நமக்கும் நாட்டுக்கும் தேவைப்படுகின்றன.

— டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி

** இளையவர், மூத்தவர் என்ற வேறுபாடு இல்லாமல் இளைஞர்கள் கற்பதற்கு ஆர்வமாகவும் மூத்தவர் கற்பிப்பதற்கு ஆர்வமாகவும் இருக்கும்போது அறிவு வெளிப்படுகிறது.

**21.12.86** கல்கி இதழின் அட்டைப் படத்துக்கு ஏற்ப எழுதப்பட்டக் கவிதைகள் :




### முதல் பரிசுக் கவிதை

பொன்னிலே
பூத்திட்ட
கார்த்திகை தீபம்
கண்ணிலே
காட்டி,
என்னிலே மாற்றம்
தந்த மானே!
நான்,
ஏழைக் குறமகளை
ஏமாற்றும் எத்தனல்ல;
'சாதியிரண்டொழிய வேறில்லை'
என்றிட்ட
தமிழ்மொழியின் நாயகன்தான்.

— பா. அருணா,
இரண்டாம் ஆண்டு விலங்கியல்,
சீதாலக்ஷ்மி ராமசாமி கல்லூரி,
திருச்சி.

### இரண்டாம் பரிசுக் கவிதை

மான் விழியே!
என் அருகில் வா
மயக்கும்
உன் விழிகள் பேசும்
மௌன மொழியை
எனக்குக் கூறிவிடு.
நாம் கற்பனைத் தேரில்
உலா வர
உன் விழிகளின்
காந்தத்தைத் தந்துவிடு.

— மு. பொன்னம்மாள்,
முதலாம் ஆண்டு ஆங்கில இலக்கியம்,
சாரான் தக்கர் கல்லூரி,
திருநெல்வேலி — 627 007.

வேலின்றி வேலவனும்
வெள்ளிமலைச் சாரலிலே
வள்ளிமாதைக் காண வந்தான் — அவள்
வதனமதைக் கண்ட வேலன்
வேடிக்கை காட்டிடவே
வேடனாக மாறிவந்தான்
வேல்முருகன் தனை நினைக்கும்
வள்ளிமனம் தனை உணர்ந்து தன்
வாழ்க்கையிலே இடமளித்தான்
வற்றாத புகழதனை
வள்ளியவள் பெற்றிடவே!

— எம். கிருபானந்தன், பி. ஏ.,
மதுரை கல்லூரி,
மதுரை.

# விழிகளின் காந்தத்தைத் தந்துவிடு!

# புகை அரக்கனை அழிக்க ஒரு திட்டம்!

"புகை அரக்கனிடம் சிக்கிய கிராமங்கள்'' என்ற தலைப்பில் கல்கி 16.11.86 இதழில் அட்டைப்படக் கட்டுரை வெளியிட்டிருந்தீர்கள்.

இப்போது அந்தப்புகை அரக்கனை அழிக்க 42 கோடி ரூபாய் முதலீட்டில் ஒரு திட்டம் அமுலாகவிருக்கிறது என்பதைத் தெரிவிப்பதில் மகிழ்ச்சி அடைகிறோம்.

நமது நாட்டிலுள்ள மொத்த சுண்ணாம்புக் கல் கனி வளத்தில் தமிழ்நாட்டில் உள்ளது ஒரே ஒரு சதவீதம்தான். ஆனால் நமது நாட்டின் மொத்த சிமெண்ட் உற்பத்தியில் தமிழ்நாட்டின் பங்கு பத்து சதவீதம்! தமிழக சிமெண்ட் தொழிற்சாலைகள் பதினாயிரம் மக்களுக்கு வேலை வாய்ப்பளித்து அத்தனை குடும்பங்களின் வாழ்க்கைக்கு உதவுகின்றன. தவிர, சிமெண்ட் உபயோகித்து இயங்கும் உபரித் தொழில்களில் மக்கள் பெறுகிற வேலை வாய்ப்புக்கள் கணக்கிலடங்காது.

நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு இன்றியமையாத அடிப்படைத் தேவையான சிமெண்ட் தொழிலகங்கள் தமிழகத்தில் பல இன்னல்களுக்கிடையே செயல்படுகின்றன. நிலக்கரிச் சுரங்கங்கள் வெகு தொலைவில் இருப்பதால் அவற்றைக் கொண்டு வருவதில் ஏற்படும் கால தாமதமும் விலை உயர்வும் இன்னல்களுள் ஒன்று. மற்றொன்று ஓயாத மின்சாரத் தட்டுப்பாடு. இதனால் ஜெனரேட்டர்களை உபயோகிக்கும் போது உற்பத்திச் செலவு கூடுதலாகிறது.

தமிழ்நாட்டில் பல சிமெண்ட் தொழிற்சாலைகள் சுமார் 40 அல்லது 50 ஆண்டுகளுக்கு முன் நிறுவப்பட்டவை. அவை அந்த நாளைய உற்பத்தி முறையைப பின்பற்றுவதால் உற்பத்திச் செலவு அதிகரிப்பதுடன் புகை, தூசி முதலியன பரவவும் காரணமாகின்றன. அவற்றுள் ஒன்றான மதுக்கரை ஏ.ஸி.ஸி. சிமெண்ட் தொழிலகம் இரு சுரங்கங்களிலிருந்து அனுப்பப்படும் தரக்குறைவான சுண்ணாம்புக் கற்களை ரசாயன முறையில் உயர்தரமாக்கி உபயோகிக்கிறது. இதன் மூலம் சிமெண்டின் தரம் சர்வதேசத் தரக் கட்டுப்பாட்டுக்கு உகந்ததாக இருக்குமாறு கவனித்துக் கொள்கிறது.

சிமெண்ட் ஆலை வெளியிடும் புகை, தூசி இவற்றால் மனிதனுக்கோ மிருகங்களுக்கோ தாவரங்களுக்கோ ஆரோக்கியம் பாதிக்கப்படாது என்பது விஞ்ஞான உண்மை. இதை உறுதிப்படுத்தி ஓர் உயர்நீதி மன்றத் தீர்ப்பே உள்ளது. ஆனாலும் புகை, தூசியால் மக்களுக்குத் தொந்தரவு அதிகம் என்பதை மறுக்க இயலாது.

இப்போது மதுக்கரையில் ஒரு புதிய திட்டத்தை 42.40 கோடி ரூபாய் முதலீட்டில் அமுல்படுத்தவிருக்கிறோம். நவீன டெக்னலஜி பயன்படுத்தப்படும். இதனால் சுரங்கத்திலிருந்து வரும் தரக்குறைவான சுண்ணாம்புக் கற்கள் இன்னும் மேம்பட்ட தொழில்நுட்ப முறையில் உயர்தரமாக்கப்படும். ஐந்து எரிகலன்களுக்குப் பதில் இனி ஒரே ஓர் எரிகலன்தான் இருக்கும். ஆனால் அதேநேரத்தில் உற்பத்தியும் அதிகரிக்கும்! இந்தியாவிலேயே முதன் முறையாக இத்திட்டம் செயல்படப் போகிறது! உலகிலேயே இந்த அளவுக்கு நவீனமான சிமெண்ட் தொழிற்கூடங்கள் இன்றையத் தேதியில் மூன்றே மூன்றுதான் உள்ளன! இதற்கான இயந்திரங்கள் உலகின் பல்வேறு நாடுகளில் தேடிப் பிடித்து வாங்கப்படுகின்றன. பண உதவியை உலக வங்கி கடனாக அளிக்க முன்வந்துள்ளது. அடுத்த ஆண்டு இறுதியில் புதிய தொழிற்சாலை இயங்க ஆரம்பித்துவிடும் என்று எதிர்பார்க்கிறோம். பின்னர் பழைய எரிகலன்கள் மூடப்படும். புதிய திட்டம் செயல்பட ஆரம்பித்த பின் தூசித் தடுப்பு கட்டுப்பாடு வாரியம் நிர்ணயித்துள்ள தூசி மட்டத்தின் அளவைவிட மிகக் குறைவாகவே தூசி வெளியேறும் என்று எதிர்பார்க்கலாம்.

ஜெனரல் மானேஜர்,
மதுக்கரை சிமெண்ட் ஆலை.



ஏ.ஸி.ஸி. சிமெண்ட் ஆலை: விரைவில் புகை குறையப் போகிறது

# பொன்னியின் செல்வன்

## ஒன்பதாவது அத்தியாயம்

## வழிநடைப் பேச்சு

அமரர் கல்கி

பாலாற்றுக்கு வடக்கேயுள்ள வறண்ட பிரதேசங்களிலேயே வந்தியத் தேவன் அதுகாறும் தன் வாழ்நாளைக் கழித்தவன். ஆகையால் ஆற்று வெள்ளத்தில் நீந்துவதற்கு அவனுக்குத் தெரியாமலிருந்தது. ஒருசமயம் வடபெண்ணைக் கரையில் எல்லைக் காவல் புரிந்து வந்த போது, குளிப்பதற்காக ஆற்றில் இறங்கினான். ஒரு பெரிய நீர்ச் சுழலில் அகப்பட்டுக் கொண்டான். அந்தப் பொல்லாத விஷமச் சுழல் அவனைச் சுற்றிச் சுற்றி வரச் செய்து வதைத்தது. அதேசமயத்தில் கீழேயும் இழுத்துக் கொண்டிருந்தது. சீக்கிரத்தில் வந்தியத்தேவனுடைய பலத்தையெல்லாம் அந்தச் சுழல் உறிஞ்சிவிட்டது. ''இனிப் பிழைக்க முடியாது; சுழலில் மூழ்கிச் சாக வேண்டியதுதான்!'' என்று வந்தியத்தேவன் நிராசை அடைந்த சமயத்தில் தெய்வாதீனமாக நதிச் சுழலிலிருந்து வெளிப்பட்டான். வெள்ளம் அவனை அடித்துக் கொண்டு போய்க் கரையில் ஒதுக்கிக் காப்பாற்றியது.

அன்றிரவு வந்தியத்தேவன் மீண்டும் சென்று படுத்தபோது அவனுக்கு நதியின் சுழலில் அகப்பட்டுத் திண்டாடியது போன்ற அதே உணர்ச்சி ஏற்பட்டது. ஒரு பெரிய இராஜாங்கச் சதிச் சுழலில் தன்னுடைய விருப்பமில்லாமலே விழுந்து அகப்பட்டுக் கொண்டதாகத் தோன்றியது. அந்த நதிச் சுழலிலிருந்து தப்பியதுபோல் இந்தச் சதிச் சுழலிலிருந்தும் தப்ப முடியுமா? கடவுள் தன்னை மறுமுறையும் காப்பாற்றுவாரா?

அன்று அவன் கடம்பூர் மாளிகையில் நடந்த நள்ளிரவுக் கூட்டத்திலிருந்து அறிந்து கொண்ட விஷயங்கள் அவனைத் திக்குமுக்காடச் செய்துவிட்டன. சோழ மகா சாம்ராஜ்யத்துக்கு வெளிப் பகைவர்களால் ஏற்பட்டிருந்த தொல்லைகள் நீங்கி, சில வருஷங்கள்தான் ஆகியிருந்தன. இளவரசர் ஆதித்த கரிகாலர் மகா வீரர்; போர்க் கலையில் நிபுணர்; ராஜதந்திரத்தில் சாணக்கியர். தம்முடைய அறிவாற்றல்களையும் சோழ நாட்டுப் படைகளின் போர்த் திறனையும் பூரணமாகப் பயன்படுத்தி இரட்டை மண்டலத்துக் கிருஷ்ண மன்னனின் ஆதிக்கத்தைத் தொண்டை மண்டலத்திலிருந்து அடியோடு தொலைத்தார்.

வெளிப் பகை ஒருவாறு ஒழிந்தது. இந்த நிலைமையில் உட்கலகமும் சதியும் தலை தூக்க ஆரம்பித்திருக்கின்றன. வெளிப்பகையைக் காட்டிலும் அபாயகரமான இந்த உட்பகையின் விளைவு என்ன ஆகும்?

சோழ நாட்டின் புகழ் பெற்ற வீரர்களும் அமைச்சர்களும் தலைவர்களும் அதிகாரிகளும் அல்லவா இந்தப் பயங்கரமான முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்? பழுவேட்டரையரும் அவருடைய சகோதரரும் எப்பேர்ப்பட்டவர்கள்? அவர்களுடைய சக்தி என்ன? செல்வாக்கு என்ன? இங்கே இன்று கூடியிருந்த மற்றவர்கள்தான் எவ்வளவு பெயரும்புகழும் செல்வாக்கும் பராக்கிரமமும் வாய்ந்தவர்கள்? இத்தகைய கூட்டம் இதுதான் முதற் கூட்டமாயிருக்குமா? பழுவேட்டரையர் மூடு பல்லக்கில் மதுராந்தகரை வைத்து இவ்விதம் இன்னும் எத்தனை இடங்களுக்குக் கொண்டு போயிருக்கிறாரோ? அடாடா! முதிய வயதில் ஓர் இளம் பெண்ணை மணந்து கொண்டது இவருக்கு இந்தச் சதிகார முயற்சிக்கு எவ்வளவு சாதகமாகப் போய் விட்டது?

சோழ சிம்மாசனத்துக்கு உரியவர் இளவரசர் ஆதித்த கரிகாலர்தான் என்பது பற்றி இன்றுவரை வந்தியத்தேவனுடைய மனத்தில் எவ்விதச் சந்தேகமும் உதிக்கவில்லை. போட்டி ஒன்று ஏற்படக் கூடும் என்று அவன் கனவிலும்கருதவில்லை.கண்டராதித்தனுடைய புதல்வர் மதுராந்தகரைப் பற்றி அவன் கேள்விப்பட்டதுண்டு. தந்தையைப் போலவே புதல்வரும் சிவ பக்திச் செல்வர் என்று அறிந்ததுண்டு. ஆனால் அவர் இராஜ்யத்துக்கு உரிமையுள்ளவர் என்றோ, அதற்காகப் போட்டியிடக் கூடியவர் என்றோ கேள்விப்பட்டதில்லை. அந்த எண்ணமே அவனுடைய மனத்தில் அதுவரையில் தோன்றியதில்லை,

ஆனால் நியாயா நியாயங்கள் எப்படி? பட்டத்துக்கு உரியவர் உண்மையிலே யார்? ஆதித்த கரிகாலரா? மதுராந்தகரா? யோசிக்க யோசிக்க இரு தரப்பிலும் நியாயம் இருப்பதாகவே தோன்றியது.போட்டி என்று உண்மையில் ஏற்பட்டால், இவர்களில் யார் வெற்றி பெறுவார்கள்? தன்னுடைய கடமை என்ன? ஆஹா! என்னென்னவோ மனக்கோட்டை கட்டிக் கொண்டு காஞ்சியிலிருந்து இந்த யாத்திரை கிளம்பினேமே? பட்டத்து இளவரசர் ஆதித்த கரிகாலருக்கு உகந்தபடி நடந்து கொண்டு சோழப் பேரரசில் பெரிய பதவிகளை அடையலாம்; காலாகாலத்தில் வாணர் குலத்தின் பூர்விக ராஜ்யத்தைக்கூடத் திரும்பப் பெறலாம் என்று நினைத்தோமே? இதற்கெல்லாம் சாதனமாக எந்தப் புளியங்கொம்பைப் பிடித்தோமோ, அதுவே முறிந்துவிடும் போலிருக்கிறதே....? இத்தகைய சிந்தனைகளினால் வந்தியத்தேவன் இரண்டாம் முறை வந்து படுத்த பிறகு வெகு நேரம் தூக்கம் பிடிக்காமல் திண்டாடினான். கடைசியாக, இரவு நாலாம் ஜாமத்தில் கிழக்கு வெளுக்கும் நேரத்தில் அவனுக்கு ஒருவாறு தூக்கம் வந்தது.



றுநாள் காலையில் உதய சூரியனுடைய செங் கிரணங்கள் சுளீர் என்று அவன் பேரில் பட்டபோது கூட வந்தியத் தேவன் எழுந்திருக்கவில்லை. கந்தமாறன் வந்து தட்டி எழுப்பிய போதுதான் தூக்கி வாரிப் போட்டுக் கொண்டு எழுந்தான்.

"இராத்திரி நன்றாய்த் தூக்கம் வந்ததா?" என்று கந்தமாறன், விருந்தினரை உபசரிக்கும் முறைப்படி கேட்டான். பிறகு அவனாகவே, "மற்ற விருந்தினரெல்லாம் தூங்கச் சென்ற பிறகு நான் இங்கு வந்து பார்த்தேன். நீ நன்றாய்க் கும்பகர்ண சேவை செய்து கொண்டிருந்தாய்!" என்று சொன்னான்.

வந்தியத் தேவன் மனத்தில் பொங்கி எழுந்த நினைவுகளையெல்லாம் அடக்கிக் கொண்டு, "குரவைக் கூத்துப் பார்த்துவிட்டு இங்கு வந்து படுத்ததுதான் தெரியும். இப்போது தான் எழுந்திருக்கிறேன். அடாடா! இவ்வளவு நேரம் ஆகிவிட்டதே! உதித்து ஒரு ஜாமம் இருக்கும் போலிருக்கிறதே! உடனே நான் கிளம்ப வேண்டும். கந்தமாறா! குதிரையை

ஆயத்தம் பண்ணும்படி உன் வேலைக்காரர்களுக்குக் கட்டளையிடு!'' என்றான்.

''அழகாயிருக்கிறது! அதற்குள்ளே நீ புறப்படுவதாவது? என்ன அவசரம்? பத்து நாளாவது இங்கே தங்கி விட்டுத்தான் போக வேண்டும்'' என்றான் கந்தமாறன்.

''இல்லை, அப்பனே! தஞ்சாவூரில் என் மாமனுக்கு உடம்பு செவ்வையாக இல்லை. பிழைப்பதே துர்லபம் என்று செய்தி வந்தது. ஆகையால் சீக்கிரத்தில் அவரைப்போய்ப் பார்க்க வேண்டும். உடனே புறப்பட வேண்டும்'' என்று ஒரே போடாகப் போட்டான் வல்லவரையன்.

''அப்படியானால் திரும்பி வரும் போதாவது இங்கே சில நாள் கட்டாயம் தாமதிக்க வேண்டும்.''

''அதற்கென்ன, அப்போது பார்த்துக் கொள்ளலாம். இப்போது நான் புறப்படுவதற்கு விடை கொடு!''

''அவ்வளவு அவசரப்படாதே! காலை உணவு அருந்திவிட்டுப் புறப்படலாம். நானும் உன்னுடன் கொள்ளிட நதி வரையில் வருகிறேன்.''

''அது எப்படி முடியும்? யார், யாரோ, பெரிய பெரிய விருந்தாளிகள் உன் வீட்டுக்கு வந்திருக்கிறார்களே, அவர்களை விட்டுவிட்டு....''

''உன்னைவிடப் பெரிய விருந்தாளி எனக்கு யாரும் இல்லை....!'' என்று கூறிய கந்தன் மாறவேள் சட்டென்று நிறுத்திக் கொண்டான். ''வந்தவர்கள் பெரிய விருந்தாளிகள்தான். ஆனால் அவர்களைக் கவனித்துக் கொள்ள என் தந்தை இருக்கிறார். அரண்மனை அதிகாரிகளும் இருக்கிறார்கள். உன்னோடு நேற்று ராத்திரிகூட நான் அதிக நேரம் பேசவில்லை. வழி நடையிலாவது சிறிது நேரம் உன்னோடு சல்லாபம் செய்தால்தான் என் மனம் நிம்மதி அடையும். அவசியம் கொள்ளிடக்கரை வரையில் வந்தே தீருவேன்!'' என்றான்.

''எனக்கு ஆட்சேபம் ஒன்றுமில்லை. உன் இஷ்டம், உன் சௌகரியம்'' என்றான் வந்தியத்தேவன்.



ரு நாழிகை நேரத்துக்குப் பிறகு இரு நண்பர்களும் இரு குதிரைகளில் ஏறிச் சம்புவரையர் மாளிகையிலிருந்து புறப்பட்டுச் சென்றார்கள். குதிரைகள் மெதுவாகவே சென்றன. பிரயாணம் மிகவும் இன்பகரமாயிருந்தது. மேலக் காற்று சாலைப் புழுதியை வாரி அடிக்கடி அவர்கள் மேல் இறைத்ததைக்கூட அந்த நண்பர்கள் பொருட்படுத்தவில்லை. பழைய ஞாபகங்களைப் பற்றிய பேச்சில் அவ்வளவாக மனத்தைப் பறி கொடுத்திருந்தார்கள்.

சிறிதுநேரத்துக்கெல்லாம்வந்தியத்தேவன் கூறினான்: ''கந்தமாறா! உன் வீட்டில் ஒரே ஒரு இரவுதான் தங்கினாலும் அது எனக்கு எவ்வளவோ பயனுள்ளதாயிருந்தது. ஆனால் ஒரே ஒரு ஏமாற்றம். உன் சகோதரியைப் பற்றி வடபெண்ணை நதிக்கரையில் என்னவெல்லாமோ வர்ணனை செய்து கொண்டிருந்தாய்! அவளை நன்றாய்ப் பார்க்கக் கூட முடியவில்லை. உன் அன்னைக்குப் பின்னால் ஒளிந்து கொண்டு அவள் எட்டிப் பார்த்த போது அவள் முகத்தில் எட்டில் ஒரு பங்குதான் தெரிந்தது. நாணமும் மடமும்பெண்களுக்குஇருக்கவேண்டியதைவிட உன் தங்கையிடம் சற்று அதிகமாகவேயிருக்கிறது.''

கந்தமாறனுடைய வாயும் உதடுகளும் ஏதோ சொல்வதற்குத் துடித்தன. ஆனால் வார்த்தை ஒன்றும் உருவாகி வரவில்லை.

''ஆயினும் பாதகமில்லை. நீதான் நான் திரும்பி வரும்போது சில நாள் உன் வீட்டில் தங்க வேண்டும் என்று சொல்கிறாயே? அப்போது பார்த்துப் பேசிக் கொண்டால் போகிறது. அதற்குள் உன் தங்கையின் கூச்சமும் கொஞ்சம் நீங்கிவிடலாம் அல்லவா? கந்தமாறா உன் சகோதரியின் பெயர் என்னவென்று சொன்னாய்?''

''மணிமேகலை!''

''அடடா! என்ன இனிமையான பெயர்! பெயரைப் போலவே அழகும் குணமும் இருந்துவிட்டால்....''

கந்தமாறன் குறுக்கிட்டு, தாபம் நிறைந்த குரலில், ''நண்பா! உன்னை




ஒன்று வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன். என் தங்கையை நீ மறந்துவிடு. அவளைப் பற்றி நான் சொன்னதையெல்லாம் மறந்துவிடு. அவள் பேச்சையே எடுக்காதே!'' என்றான்.

''இது என்ன, கந்தமாறா! ஒரே தலைகீழ் மாறுதலாயிருக்கிறதே! நேற்று இரவு கூட உன் வீட்டுக்கு நான் மருமகனாக வரப்போவதைப்பற்றி ஜாடையாகச் சொன்னாயே!''

''அவ்விதம் நான் சொன்னது உண்மைதான். ஆனால் பிறகு வேறு நிலைமை ஏற்பட்டுவிட்டது. என் பெற்றோர்கள் வேறு இடத்தில் என் சகோதரியைக்கலியாணம்செய்துகொடுக்க முடிவு செய்துவிட்டார்கள். மணிமேகலையும் அதற்குச் சம்மதித்துவிட்டான்!''

வந்தியத்தேவன் மனத்திற்குள், ''மணிமேகலை வாழ்க!'' என்று சொல்லிக் கொண்டான். மணிமேகலையை யாருக்குக் கொடுக்க நிச்சயித்திருப்பார்கள் என்று ஊகிப்பதிலும் அவனுக்குக் கஷ்டம் ஏற்படவில்லை. மூடு பல்லக்கிலிருந்து வெளிப்பட்ட இளவரசர் மதுராந்தகருக்குத்தான் நிச்சயித்திருப்பார்கள். மதுராந்தகருடைய கட்சிக்குப் பலம் தேட இப்படியெல்லாம் உறவுகளையும் ஏற்படுத்துகிறார்களாக்கும். பழுவேட்டரையர் பொல்லாத கெட்டிக்காரர்தான்!

''ஆஹா! நேற்று ராத்திரி வந்திருந்த பணக்கார விருந்தாளிகளில் ஒருவரை மாப்பிள்ளையாகத் திட்டம் செய்தீர்களாக்கும்! கந்தமாறா! இதில் எனக்கு வியப்பும் இல்லை; ஏமாற்றமும் இல்லை. ஒரு மாதிரி நான் எதிர்பார்த்ததுதான்.....''

''எதிர்பார்த்தாயா? அது எப்படி?''

''என்னைப் போல் ஏழை அநாதைக்கு யார் பெண்ணைக் கொடுப்பார்கள்? ஊரும் வீடும் இல்லாதவனை எந்தப் பெண் மணந்து கொள்ள இணங்குவாள்? எப்போதோ என் குலத்தைச் சேர்ந்த முன்னோர்கள் அரசு செலுத்தினார்கள் என்றால், அது இப்போது என்னத்துக்கு ஆகும்?''

''நண்பா! போதும், நிறுத்து. என்னைப் பற்றியும் என் குடும்பத்தைப் பற்றியும் அவ்வளவு கேவலப்படுத்தாதே! நீ சொல்வது ஒன்றும் காரணமில்லை. வேறு மிக முக்கியமான காரணம் இருக்கிறது. அதை அறிந்தால் நீயே ஒப்புக் கொள்வாய். ஆனால் அதைநான் இப்போதுவெளிப்படுத்துவதற்கில்லை. சமயம் வரும்போது நீயே தெரிந்து கொள்வாய்!''

''கந்தமாறா! இது என்ன ஒரே மர்மமாகவே இன்றைக்கு நீ பேசிக் கொண்டு வருகிறாயே?''

''அதற்காக என்னை மன்னித்துவிடு. உன்னிடம் கூட நான் மனம் விட்டுப் பேச முடியாதபடி அப்படி ஒரு பெரிய காரியந்தான். எது எப்படியானாலும் நம்முடைய சிநேகத்துக்கு எவ்விதப் பங்கமும் வராது என்பதை நம்பு. விஷயம் வெளியாக வேண்டிய சமயம் வரும்போது, ஓட்டமாக ஓடிவந்து உன்னிடந்தான் முதலில் சொல்வேன். அதுவரையில் என்னிடம் நம்பிக்கை வைத்திரு. உன்னை நான் ஒருநாளும் கைவிடமாட்டேன் என்று நம்பு.....!''

''இந்த வாக்குறுதிக்காக ரொம்ப

வந்தனம். ஆனால் என்னைக் கைவிடும்படியான நிலைமை என்ன என்பது தான் தெரியவில்லை! அப்படி நான் இன்னொருத்தரை நம்பிப் பிழைக்கிறவனும் அல்ல கந்தமாறா! என்னுடைய உடைவாளையும் கைவேலையுமே நான் நம்பியிருப்பவன்!''

''அந்த உடைவாளையும் வேலையும் உபயோகிக்க வேண்டிய சந்தர்ப்பம் சீக்கிரத்தில் வரலாம். அப்போது நாம் இருவரும் ஒரே கட்சியில் நின்று தோளோடு தோள் சேர்ந்து போரிடுவோம். அதனால் உன்னுடைய நோக்கமும் கைகூடும்....''

''இது என்ன? ஏதாவது யுத்தம் சீக்கிரம் வரும் என்று எதிர்பார்க்கிறாயா? அல்லது ஈழநாட்டில் நடக்கும் யுத்தத்துக்குப் போகும் உத்தேசம் உனக்கு உண்டா?''

''ஈழத்துக்கா? ஈழத்தில் நடக்கும் அழகான யுத்தத்தைப் பற்றிக் கேட்டால் நீ ஆச்சரியப்பட்டுப் போவாய்! ஈழத்தில் உள்ள நம் வீரர்களுக்காகச் சோழ நாட்டிலிருந்து அரிசியும் மற்ற உணவுப் பொருள்களும் போக வேண்டுமாம்! வெட்கக்கேடு! நான் சொல்வது வேறு விஷயம். கொஞ்சம் பொறுமையாயிரு. சமயம் வரும் போது சொல்கிறேன். தயவு செய்து இப்போது என் வாயைப் பிடுங்காதே!''

''சரி, சரி! உனக்கு விருப்பம் இல்லையென்றால் ஒன்றும் சொல்ல வேண்டாம். வாயைக் கூடத் திறக்க வேண்டாம். அதோ கொள்ளிடமும் தெரிகிறது!'' என்றான் வந்தியத் தேவன்.

உண்மையில் சற்றுத் தூரத்தில் கொள்ளிடப் பெருநதியின் வெள்ளம் தெரிந்தது. சில நிமிஷ நேரத்தில் நண்பர்கள் நதிக்கரையை அடைந்தார்கள்.



டிப் புதுப் பிரவாகம் அந்த மாநதியில் கரை புரண்டு சென்றது. மறு கரை வெகு தூரத்தில் இருப்பதாகத் தோன்றியது. மறு கரையிலே

யுள்ள மரங்கள் சிறிய செடிகளைப் போலிருந்தன. செக்கச் சிவந்த பெரு நீர் வெள்ளம் சுழிகளும் சுழல்களுமாக, வட்ட வடிவக் கோலங்கள் போட்டுக் கொண்டு, கொம்மாளம் அடித்துக் கொண்டு, கரையை உடைக்கப் பிரயத்தனம் செய்து கொண்டு, 'ஹோ' என்று இரைந்து கொண்டு, கீழ்க்கடலை நோக்கி அடித்து மோதிக் கொண்டு விரைந்து சென்ற காட்சியை வந்தியத்தேவன் பார்த்துப் பிரமித்து நின்றான்.

தோணித்துறையில் ஓடம் ஒன்று நின்றது. ஓடந் தள்ளுவோர் இருவர் கையில் நீண்ட கோல்களுடன் ஆயத்தமாயிருந்தார்கள். படகில் ஒரு மனிதர் ஏற்கெனவே ஏறியிருந்தார். அவரைப் பார்த்தால் பெரிய சிவபக்த சிகாமணி என்று தோன்றியது.

கரையில் வந்து கொண்டிருந்தவர்களைப் பார்த்து, "சாமி! படகில் வரப் போகிறீர்களா?" என்று படகோட்டிகளில் ஒருவன் கேட்டான்.

"ஆம்; இவர் வரப் போகிறார். கொஞ்சம் படகை நிறுத்து!" என்றான் கந்தமாறன்.

இரு நண்பர்களும் குதிரை மீதிருந்து கீழே குதித்தார்கள்.

"யோசனை இல்லாமல் வந்துவிட்டேனே? இந்தக் குதிரையை என்ன செய்வது? படகில் ஏற்ற முடியுமா?" என்று வந்தியத்தேவன் கேட்டான்.

"தேவையில்லை. நம்மைத் தொடர்ந்து இதோ இரண்டு ஆட்கள் வந்திருக்கிறார்கள். ஒருவன் உன் குதிரையை இங்கிருந்து கடம்பூருக்கு இட்டு வருவான். இன்னொருவன் உன்னுடன் படகில் ஏறி வந்து அக்கரையில் உனக்கு வேறு குதிரை சம்பாதித்துக் கொடுப்பான்!" என்றான் கந்தமாறன்.



"ஆஹா! எவ்வளவு முன் யோசனை? நீ அல்லவா உண்மை நண்பன்?" என்றான் வந்தியத்தேவன்.

"பாலாற்றையும் பெண்ணையாற்றையும் போலத்தான் கொள்ளிடத்தைப் பற்றி நீ நினைத்திருப்பாய். இதில் குதிரையைக் கொண்டு போக முடியாது என்று நீ எண்ணியிருக்க மாட்டாய்!"

"ஆமாம்; அவ்விதம் உங்கள் சோழ நாட்டு நதியைப் பற்றி அலட்சியமாய் நினைத்ததற்காக மன்னித்து விடு! அப்பப்பா! இது என்ன ஆறு? இது என்ன வெள்ளம்? சமுத்திரம் போல அல்லவா பொங்கி வருகிறது?"

இரு நண்பர்களும் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டு விடை பெற்றுக் கொண்டார்கள்.

வந்தியத் தேவன் நதிக்கரை யோரமாகச் சென்று படகில் ஏறினான்.

கந்தமாறனுடன் வந்த ஆள்களில் ஒருவனும் ஏறிக் கொண்டான்.

படகு புறப்படுவதற்குச் சித்தமாயிருந்தது. ஓடக்காரர்கள் கோல் போட ஆரம்பித்தார்கள்.

திடீரென்று கொஞ்ச தூரத்திலிருந்து, "நிறுத்து! நிறுத்து! படகை நிறுத்து!" என்று ஒரு குரல் கேட்டது.

ஓடக்காரர்கள் கோல் போடாமல் கொஞ்சம் தயங்கி நின்றார்கள்.

கூவிக் கொண்டு ஓடி வந்தவன் அதிவிரைவில் கரைக்கருகில் வந்து சேர்ந்தான். முதற் பார்வையிலேயே அவன் யார் என்பது வந்தியத் தேவனுக்குத் தெரிந்து போயிற்று. அவன் ஆழ்வார்க்கடியான் நம்பிதான்.

வருகிறவர் வைஷ்ணவர் என்பதை அறிந்ததும் படகிலிருந்த சைவர், "விடு! படகை விடு! அந்தப் பாஷாண்டியுடன் நான் படகில் வர மாட்டேன். அவன் அடுத்த படகில் வரட்டும்!" என்றார்.

ஆனால் வந்தியத்தேவன் ஓடக்காரர்களைப் பார்த்து, "கொஞ்சம் பொறுங்கள். அவரும் வரட்டும்! படகில் நிறைய இடம் இருக்கிறதே! ஏற்றிக் கொண்டு போகலாம்!" என்றான்.

ஆழ்வார்க்கடியானிடமிருந்து நேற்றிரவு நிகழ்ச்சிகளைப் பற்றிப் பல விஷயங்களைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வந்தியத்தேவன் விரும்பினான்.

# பத்தாவது அத்தியாயம்

# குடந்தை சோதிடர்



டகு நாட்டில் பிறந்து வளர்ந்த பொன்னி நதி கன்னிப் பருவம் கடந்ததும் தன் மணாளனாகிய சமுத்திர ராஜனிடம் சென்றடைய விரும்பினாள். காடும் மேடும் கடந்து பாறைகளையும் பள்ளங்களையும் தாண்டிக் கொண்டு விரைந்து சென்றாள். சமுத்திர ராஜனை நெருங்க, நெருங்க, நாயகனைக் காணப் போகிறோம் என்ற குதூகலத்தினால் அவள் உள்ளம் விம்மி, உடல் பூரித்தது. இன்னும் சற்றுத் தூரம் சென்றாள். காதலனை அணைத்துக் கொள்ளக் கரங்கள் இரண்டு உண்டாயின. இரு கரங்களை விரித்தவாறு தாவிப் பாய்ந்து சென்றாள். ஆனால் உள்ளத்தில் பொங்கிய ஆர்வ மிகுதிக்கு இரு கரங்கள் போதுமென்று தோன்றவில்லை. அவளுடைய ஆசைக்கரங்கள் பத்து, இருபது, நூறு என்று வளர்ந்தன. அவ்வளவு கரங்களையும் ஆவலுடன் நீட்டிக்கொண்டு சமுத்திரராஜனை அணுகினாள். இவ்விதம் ஆசைக் கணவனை அடைவதற்குச் சென்ற மணப் பெண்ணுக்குச் சோழ நாட்டுச் செவிலித் தாய்மார் செய்த அலங்காரங்கள்தான் என்ன? அடடா! எத்தனை அழகிய பச்சைப் புடைவைகளை உடுத்தினார்கள்? எப்படியெல்லாம் வண்ண மலர்களைச் சூட்டினார்கள்? எவ்விதமெல்லாம் பரிமள கந்தங்களைத் தூவினார்கள்? ஆஹா! இரு கரையிலும் வளர்ந்திருந்த புன்னை மரங்களும் கடம்ப மரங்களும் முத்து மலர்களையும் ரத்தினப் பூக்களையும் வாரிச் சொரிந்த அருமையை எவ்விதம் வர்ணிப்பது? தேவர்கள் பொழியும் பூமாரியும் இதற்கு இணையாகுமா?

பொன்னி நதியே! உன்னைப் பார்த்துக் களிப்படையாத கன்னிப் பெண் யார்தான் இருக்க முடியும்! உன் மணக்கோல ஆடை அலங்காரங்களைக் கண்டு உள்ளம் பொங்காத மங்கை யார் இருக்க முடியும்?

கலியாணப் பெண்ணைச் சுற்றி ஊரிலுள்ள கன்னிப் பெண்கள் எல்லாரும் சூழ்ந்து கொள்வது போல் உன்னை நாடிப் பெண்கள் வந்து கூடுவதும் இயற்கையல்லவா!

பொன்னி தன் மணாளனைத் தழுவிக் கொள்ள ஆசையுடன் நீட்டும் பொற்கரங்களில் ஒன்றுக்கு அரிசிலாறு என்று பெயர். காவேரிக்குத் தென்புறத்தில் மிகநெருக்கத்தில் அரிசிலாறு என்னும் அழகிய நதி அமைந்திருக்கிறது. அப்படி ஒரு நதி இருப்பது சற்று தூரத்தில் இருந்து வருகிறவர்களுக்குச் சொல்லித்தான் தெரிய வேண்டும். இருபுறமும் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் இனிய பசு மரங்கள் அப்படி அந்நதியை மறைத்து விடுகின்றன. பிறந்தது முதல் அந்தப்புரத்தை விட்டு வெளியேறி அறியாத அரசகுலக் கன்னியென்றே அரிசிலாற்றைச் சொல்லலாம். அந்தக் கன்னி நதியின் அழகுக்கு இந்த உலகில் உவமையே கிடையாது.



ல்லது; அந்தப்புரம் என்னும் எண்ணத்தை மறந்துவிட்டு நேயர்கள் நம்முடன் அரிசிலாற்றை நெருங்கி வருவார்களாக! சோலையாக நெருங்கி வளர்ந்திருந்த மரங்களுக்கிடையே புகுந்து வருவார்களாக! அடடா! இது என்ன அருமையான காட்சி? அழகுக்கு அழகு செய்வது போலும் அமுதத்துக்கு இனிப்பு ஊட்டுவது போலும் அல்லவா இருக்கிறது?

சித்திர விசித்திரமாகச் செய்த அன்ன வடிவமான வண்ணப் படகில் வீற்றிருக்கும் இந்த வனிதா மணிகள் யார்? அவர்களில் நடுநாயகமாக, நட்சத்திரங்களுக்கிடையில் பூரண சந்திரனைப்போல், ஏழுலகங்களையும் ஆளப் பிறந்த ராணியைப் போல், காந்தியுடன் விளங்கும் இந்த நாரீமணி யார்?

அவனுக்கு அருகில் கையில் வீணையுடன் வீற்றிருக்கும் சாந்த சுந்தரி யார்? இனிய குரல்களில் இசை பாடி நதி வெள்ளத்துடன் கீத வெள்ளமும் கலந்து பெருகச் செய்து கொண்டு வரும் இந்த கந்தர்வப் பெண்கள் யார்? அவர்களில் ஒருத்தி மீனலோசனி; இன்னொருத்தி நீலலோசனி; ஒருத்தி தாமரை முகத்தாள்; இன்னொருத்தி கமல இதழ் நயனத்தாள். ஆஹா! வீணையை மீட்டுகிறாளே, அவளுடைய காந்தளை ஒத்த விரல்கள் வீணைத் தந்திகளில் அங்குமிங்கும் சஞ்சரிக்கும் அழகைப் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

அவர்கள் இசைக்கும் கீதத்தின் இனிமையைத்தான் என்ன என்று சொல்லுவது? அதைக் கேட்பதற்காக நதியின் வெள்ளம்கூட அல்லவா தன் ஓசையை நிறுத்தியிருக்கிறது? நதிக் கரை மரங்களில் வாழும் கிளிகளும் குயில்களும்கூட வாய் திறவா மோனத்தில் ஆழ்ந்திருக்கின்றனவே! மனிதர்களாய்ப் பிறந்தவர்கள்,கேட்கும் செவி படைத்த பாக்கியசாலிகள் — அந்த அமுத கானத்தைக் கேட்டுப் பரவசம் அடைவதில் வியப்பு என்ன?

படகில்வரும் அப்பெண்கள் என்ன பாடுகிறார்கள் கேட்கலாம்:—

மருங்கு வண்டு சிறந்து ஆர்ப்ப,
மணிப்பூ ஆடை அது போர்த்துக்
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்தாய் வாழி! காவேரி!
கருங்கயற்கண் விழித்து ஒல்கி
நடந்த எல்லாம் நின் கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி!

பூவர் சோலை மயிலாடப்
புரிந்து குயில்கள் இசைபாடக்
காமர் மாலை அருகசைய
நடந்தாய் வாழி! காவேரி!
காமர் மாலை அருகசைய
நடந்த வெல்லாம், நின் கணவன்
நாம வேலின் திறங்கண்டே
அறிந்தேன் வாழி! காவேரி!

இந்த அமுதத் தமிழ்ப் பாடல்களை எங்கேயோ கேட்டிருக்கிறோமல்லவா? ஆம். சிலப்பதிகாரத்தில் உள்ள வரிப் பாடல்கள் இவை. எனினும், இந்தப் பெண்கள் பாடும்போது முன் எப்போதுமில்லாத வனப்பும் கவர்ச்சியும் பெற்று விளங்குகின்றன. இவர்கள் பொன்னி நதியின் அருமைத் தோழிகள் போலும்! அதனாலேதான் இவ்வளவு பரவசமாக உணர்ச்சி ததும்பப்



பாடுகிறார்கள். அடடா! பாடலும் பண்ணும் பாவமும் எப்படிக் கலந்து இழைந்து குழைந்து இவர்களுடைய குரலிலிருந்து அமுத வெள்ளமாகப் பொழிகின்றன? பாட்டாவது, பண்ணாவது, கானமாவது, இசையாவது! அதெல்லாம் ஒன்றுமில்லை. இது ஏதோ மாயக் கலை! பாடுகிறவர்கள், கேட்பவர்கள் எல்லாரையும் பித்துப் பிடிக்கச் செய்யும் மந்திர வித்தை!

படகு மிதந்துகொண்டே வந்து, மரங்கள் சிறிது இடைவெளி தந்த ஓடத்துறையில் ஒதுங்கி நிற்கிறது. இரண்டு பெண்கள் இறங்குகிறார்கள். அவர்களில் ஒருத்தி, ஏழுலகத்துக்கும் ராணி எனத் தகும் கம்பீரத் தோற்றமுடைய பெண்மணி. இன்னொருத்தி வீணைத் தந்திகளில் விரல்களை ஓட்டி இன்னிசை எழுப்பிய நங்கை. இருவரும் அழகிகள் என்றாலும் ஒருவருடைய அழகுக்கும் இன்னொருவருடைய அழகுக்கும் மிக்க வேற்றுமை இருந்தது. ஒருத்தி செந்தாமரை மலரின் கம்பீர சௌந்தரியம் உடையவள். இன்னொருத்தி குமுத மலரின் இனிய அழகை உடையவள். ஒருத்தி பூரண சந்திரன்; இன்னொருத்தி காலைப் பிறை. ஒருத்தி ஆடும் மயில்; இன்னொருத்தி பாடும் குயில். ஒருத்தி இந்திராணி; இன்னொருத்தி மன்மதனின் காதலி. ஒருத்தி வேகவாஹினியான கங்காநதி; இன்னொருத்தி குழைந்து நெளிந்து செல்லும் காவேரி.

வாசகர்களை மேலும் சந்தேக ஆராய்ச்சி நிலையில் விட்டு வைக்கா



மல் இவர்கள் இருவரும் யார் என்று சொல்லிவிடுகிறோம். கம்பீரத் தோற்றமுடைய மங்கைதான் சுந்தர சோழ மன்னரின் செல்வப் புதல்வி குந்தவை. சரித்திரத்தில் ராஜராஜன் என்று புகழ் பெற்ற அருள்மொழி வர்மனின் சகோதரி. அரசிளங்குமரி என்றும் இளைய பிராட்டி என்றும் மக்களால் போற்றப்பட்ட மாதரசி. சோழ ராஜ்யத்தின் மகோந்நதத்திற்கு அடிகோலிய தமிழ்ப் பெரும் செல்வி. ராஜராஜனுடைய புதல்வன் ராஜேந்திரனை எடுத்து வளர்த்து வீராதி வீரனையும் மன்னாதி மன்னனையும் ஆக்கிய தீரப் பெண்மணி.

இன்னொருத்தி குந்தவைப் பிராட்டியுடன் இருக்கும் பாக்கியத்தை நாடி வந்த கொடும்பாளூர்ச் சிற்றரசர் குலப்பெண். பிற்காலத்தில், சரித்திரத்திலேயே இணையில்லாத பாக்கியவதியாகப் போகிறவள். இன்று அடக்கமும் இனிமையும் சாந்தமும் உருவெடுத்து விளங்குகிறவள்.


ந்த இரு மங்கைமார்களும் படகிலிருந்து கரையில் இறங்கினார்கள். குந்தவை மற்றத் தோழிப் பெண்களைப் பார்த்து, "நீங்கள் இங்கேயே இருங்கள். ஒரு நாழிகை நேரத்தில் திரும்பி வந்து விடுகிறோம்!" என்றாள். அந்தத் தோழிப் பெண்கள் அனைவரும் தெய்வத் தமிழ்நாட்டில் பற்பல சிற்றரசர்களின் அரண்மனையில் பிறந்த அரசகுமாரிகள். குந்தவை தேவிக்குத் தோழியாக இருப்பதைப் பெறற்கரும் பேறாகக் கருதிப் பழையாறை அரண்மனைக்கு வந்தவர்கள். இப்போது தங்களில் ஒருத்தியை மட்டும் அழைத்துக் கொண்டு குந்தவைப் பிராட்டி கரையில் இறங்கிப் "போய்விட்டு விரைவில் வருகிறேன்" என்றதும் அவர்களுடைய கண்களில் ஏமாற்றமும் அசூயையும் தோன்றின.



கரையில் குதிரை பூட்டிய ரதம் ஒன்று சித்தமாயிருந்தது. "வானதி! ரதத்தில் ஏறிக் கொள்!" என்றாள் தன் தோழியைப் பார்த்து. வானதி ஏறியதும் தானும் ஏறிக் கொண்டாள். ரதம் வேகமாய்ச் சென்றது.

"அக்கா! நாம் எங்கே போகிறோம் எனக்குச் சொல்லலாமா?" என்று வானதி கேட்டாள்.

"சொல்லாமல் என்ன? குடந்தை ஜோதிடர் வீட்டுக்குப் போகிறோம்" என்றாள் குந்தவை.

"ஜோதிடர் வீட்டுக்கு எதற்காகப் போகிறோம், அக்கா? என்னத்தைப் பற்றிக் கேட்பதற்காக?"

"வேறு எதற்கு? உன்னைப் பற்றிக் கேட்பதற்காகத்தான். சில மாத காலமாக நீ இப்படிப் பிரமை பிடித்தவள் போலும் உடல் மெலிந்தும் வருகிறாயா! உனக்கு எப்போது பிரமை நீங்கி உடம்பு தேறும் என்று கேட்பதற்காகத்தான்!"

"அக்கா! தங்களுக்கு ரொம்பப் புண்ணியமுண்டு. எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை. என்னைப் பற்றிக் கேட்பதற்காகப் போகவேண்டாம். திரும்பி விடுவோம்!"

"இல்லையடி அம்மா, இல்லை! உன்னைப் பற்றிக் கேட்பதற்காக இல்லை. என்னைப் பற்றிக் கேட்பதற்காகத்தான் போகிறேன்."

"தங்களைப் பற்றி என்ன கேட்டுத் தெரிந்து கொள்ளப் போகிறீர்கள்? ஜோசியரிடம் கேட்டு என்ன தெரிந்து கொள்ளப் போகிறீர்கள்?"

"எனக்குக் கலியாணம் ஆகுமா? அல்லது கடைசி வரையில் கன்னிப் பெண்ணாகவே இருந்து காலங் கழிப்பேனா என்று கேட்கப் போகிறேன்."

"அக்கா! இதற்கு ஜோசியரிடம் போய்க் கேட்பானேன்! தங்களுடைய

மனத்தையேயல்லவா கேட்க வேண்டும்! தாங்கள் தலையை அசைக்க வேண்டியதுதான்! இமயமலை முதல் குமரிமுனைவரையில் உள்ள ஐம்பத்தாறு தேசத்து ராஜாக்களும் போட்டி போட்டுக் கொண்டு ஓடி வர மாட்டார்களா? ஏன்? கடல் கடந்த தேசங்களிலேயிருந்தெல்லாம் கூட வருவார்களே? தங்களைக் கைப்பிடிக்கும் பேறு எந்த வீர இராஜ குமாரனுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ? அதைத் தாங்கள் அல்லவா நிர்மானிக்க வேண்டும்!''

''வானதி நீ சொல்வதெல்லாம் உண்மை என்று வைத்துக் கொண்டாலும் அதற்கு ஒரு தடை இருக்கிறது. எந்த தேசத்து அரச குமாரனையாவது மணம் புரிந்து கொண்டால் நான் அவனுடைய நாட்டுக்குப் போக வேண்டி வருமல்லவா? எனக்கு இந்தப் பொன்னி நதி பாயும் சோழ நாட்டிலிருந்துவேறொரு நாட்டுக்குப்போகப் பிடிக்கவில்லையடி! வேறு நாட்டுக்குப் போவதில்லை என்று நான் சபதம் எடுத்துக் கொண்டிருக்கிறேன்...''

''அது ஒரு தடையாகாது. தங்களை மணம் புரிந்து கொள்ளும் எந்த ராஜ குமாரனும் தங்கள் காலில் விழுந்து கிடக்கும் அடிமையாகவே இருப்பான், இங்கேயே இருக்க வேண்டும் என்றால் இருந்துவிட்டுப் போகிறான்.''

''ஆகா! எலியைப் பிடித்து மடியில் வைத்துக் கட்டிக் கொள்வது போல் வேறு தேசத்து ராஜகுமாரனை நம் ஊரிலேயே கொண்டு வைத்துக் கொள்ளவா சொல்கிறாய்? அதனால் என்னென்ன தொல்லைகள் எல்லாம் விளையும் தெரியுமா?''

''எப்படியும் பெண்ணாய்ப் பிறந்தவர்கள் ஒருநாள் கலியாணம் செய்து கொண்டுதானே தீர வேண்டும்?''

''அப்படி ஒரு சாஸ்திரத்திலும் சொல்லியிருக்க வில்லையடி, வானதி! ஔவையாரைப் பார்! அவள் என்றும் கன்னி அழியாத கவிசுவரியாகப் பல காலம் ஜீவித்திருக்கவில்லையா?''

''ஔவையார் இளம் பிராயத்திலேயே கடவுளின் வர்த்தினால் கிழவியாகப் போனவள். தாங்கள் அதைப் போல் ஆகவில்லையே?''

''சரி, அப்படிக் கலியாணம் செய்து கொள்வது என்று ஏற்பட்டால் அநாதையான சோழ வீரன் ஒருவனையே நான் மணந்து கொள்வேன். அத்தகையவனுக்கு ராஜ்யம் இராது. என்னை அழைத்துக்கொண்டுவேறொருதேசத்துக்குப் போக வேண்டும் என்று சொல்லமாட்டான்! இங்கேயே, சோழ நாட்டிலேயே, இருந்து விடுவான்...''

''அக்கா! அப்படியானால் நீங்கள் இந்தச் சோழநாட்டை விட்டுப் போக மாட்டீர்களே?''

''ஒருநாளும் போக மாட்டேன். சொர்க்கலோகத்துக்கு என்னை அரசியாக்குவதாகச் சொன்னாலும் போக மாட்டேன்.''

''இன்றைக்குத்தான் என் மனம் நிம்மதி அடைந்தது.''

''அது என்னடி?''

''நீங்கள் வேறு நாட்டுக்குப் போனால், நானும் உங்களோடு வந்தே தீர வேண்டும். தங்களை விட்டுப் பிரிந்திருக்க என்னால் முடியாது. அதே சமயத்தில் இந்தச் சோழவள நாட்டை விட்டுப் போகவும் எனக்கு மனம் இல்லை.''

''கலியாணம் ஆனால் நீ போய்த் தானே தீர வேண்டும்?''

''நான் கலியாணமே செய்து கொள்ளப் போவதில்லை, அக்கா!''

''அடியே! எனக்குச் செய்த உபதேசமெல்லாம் எங்கே போயிற்று?''

''தங்களைப் போலவா நான்?''

''அடி கள்ளி! எனக்கு எல்லாம் தெரியும்! என் கண்ணில் மண்ணைத் தூவலாம் என்றா பார்க்கிறாய்? உனக்குச் சோழ நாட்டில் அபிமானம் ஒன்றும் இடையாது. நீ ஆசை வைத்திருக்கும் சோழநாடு வாளும் வேலும் தாங்கி ஈழ நாட்டுக்கு யுத்தம் செய்ய அல்லவா போயிருக்கிறது? உன் அந்தரங்கம் எனக்குத் தெரியாது என்றா நினைத்தாய்?''

''அக்கா! அக்கா! நான் அவ்வளவு மூடமதி உடையவளா! சூரியன் எங்கே? காலைப் பனித் துளி எங்கே? சூரியனுடைய நட்புக்குப் பனித் துளி ஆசைப்பட்டால் என்ன பயன்?''

''பனித்துளி சிறியதுதான்! சூரியன் பெரியது, பிரகாசமானதுதான்! ஆனா

லும் பனித் துளி அப்படிப்பட்ட சூரியனைச் சிறைப்படுத்தித் தனக்குள் வைத்திருக்கிறதோ, இல்லையோ?''

வானதி உற்சாகமும் ஆர்வமும் நிறைந்த குரலில், ''அப்படியா சொல்கிறீர்கள்! பனித் துளி கூடச் சூரியனை அடையலாம் என்று சொல்கிறீர்களா?'' என்றாள். பிறகு திடீரென்று மனச்சோர்வு வந்துவிட்டது. ''பனித்துளி ஆசைப்படுகிறது; சூரியனையும் சிறை பிடிக்கிறது. ஆனால் பலன் என்ன? சிறிது நேரத்துக்கெல்லாம் சரியான தண்டனை அடைகிறது. வெயிலில் உலர்ந்து இருந்த இடம் தெரியாமல் மறைகிறது!''

''அது தவறு, வானதி! பனித் துளியின் ஆசையைக் கண்டு சூரியன் தன்னுடன் பனித் துளியை ஐக்கியப்படுத்திக் கொள்கிறான். தன் ஆசைக்குகந்த பனித்துளிப் பெண் பிற புருஷர் கண்ணில் படக் கூடாது என்று அவன் எண்ணம். இரவு வந்ததும் மறுபடியும் வெளியே விட்டு விடுகிறான். மறைந்த பனித்துளி மறுபடியும் வந்து உதிக்கிறது அல்லவா?''

''அக்கா! இதெல்லாம் என்னைத் தேற்றுவதற்காகச் சொல்கிறீர்கள்.''

''அப்படியானால் உன் மனத்தில் குறை இருக்கிறது என்று சொல்லு. இத்தனை நாள் 'இல்லவே இல்லை' என்று சாதித்தாயே? அதனால்தான் குடந்தை ஜோசியரிடம் போகிறேன்.''

''என் மனத்தில் குறையிருந்தால், அதைப் பற்றிக் கேட்கச் சோதிடரிடம் போய் என்ன பயன்?'' என்று கூறி வானதி பெருமூச்செறிந்தாள்.





டந்தை ஜோதிடரின் வீடு அந்த நகரின் ஒரு மூலையில் காளி கோயிலுக்கு அருகில் ஒரு தனித்த இடத்தில் இருந்தது. குடந்தை நகருக்குள் புகாமலேயே நகரைச் சுற்றிக் கொண்டு ரதம் அந்த வீடு சென்று அடைந்தது. ரத சாரதி ரதத்தைத் தங்கு தடையின்றி அங்கே ஓட்டிக் கொண்டு போய்ச் சேர்த்ததைப் பார்த்தால், அவன் அதற்குமுன் பலமுறை அங்கே ரதம் ஓட்டிக் கொண்டு சென்றிருக்க வேணும் என்று தோன்றியது.

வீட்டு வாசலில் ஜோதிடரும் அவருடைய சீடர் ஒருவரும் ஆயத்தமாகக் காத்திருந்தார்கள். ஜோதிடர் மிக்க பக்தி மரியாதையுடன் வந்தவர்களை வரவேற்று உபசரித்தார்.

''பெருமாட்டி! கலைமகளும் திருமகளும் ஒருருவாய் வந்த தாயே! வர வேணும்! வரவேணும்! இந்த ஏழையின் குடிசை செய்த பாக்கியம், மறுமுறையும் தாங்கள் இக்குடிசையைத் தேடி வந்தீர்கள்!'' என்றார்.

''ஜோதிடரே! இந்த வேளையில் தங்களைத் தேடிக் கொண்டு வேறு யாரும் இங்கு வரமாட்டார்கள் அல்லவா?'' என்றாள் குந்தவை.

''வரமாட்டார்கள், தாயே! இப்போதெல்லாம் என்னைத் தேடி அதிகம் பேர் வருவதே இல்லை. உலகத்தில் கஷ்டங்கள் அதிகமாகும்போதுதான் ஜோசியர்களைத் தேடி மக்கள் அதிகமாக வருவார்கள். இப்போது தங்களுடைய திருத்தந்தை—சுந்தரச்சோழக் கோமகனாரின் ஆட்சியில் — குடிகளுக்குக் கஷ்டம் என்பதே கிடையாது. எல்லாரும் சுகசௌக்கியங்களுடன் சகல சம்பத்துக்களையும் பெற்றுச் சந்தோஷமாக வாழ்கிறார்கள். என்னைத் தேடி ஏன் வருகிறார்கள்?'' என்றார் ஜோதிடர்.

''அப்படியானால், எனக்கு ஏதோ கஷ்டம் வந்திருப்பதினால்தான் உம்மைத் தேடி வந்திருக்கிறேன் என்று சொல்கிறீராக்கும்!''

''இல்லை, பெருமாட்டி! இல்லவே இல்லை! நவநிதியும் கொழிக்கும் பழையாறை மன்னரின் திருக் குமாரிக்குக்

கஷ்டம் வந்தது என்று எந்தக் குருடன் தான் சொல்லுவான்! உலகத்தில் மக்களுக்குக் கஷ்டமே இல்லாமற் போய் விட்டபடியால், இந்த ஏழை ஜோதிடனுக்கு மட்டும் கஷ்டம் வந்திருக்கிறது. இவனை யாரும் கவனிப்பார் இல்லை. ஆகையால், இந்த ஏழையின் கஷ்டத்தைத் தீர்ப்பதற்காக அம்பிகையைப்போல்வந்திருக்கிறீர்கள். தாயே! குடிசைக்குள்ளே வந்தருள வேண்டும். இங்கேயே தங்களை நிறுத்தி வைத்திருப்பது நான் செய்யும் அபசாரம்!'' என்று ஜோசியர் சமத்காரமாகப் பேசினார்.

ரத சாரதியைப் பார்த்துக் குந்தவை ''ரதத்தைக் கோயிலுக்குச் சமீபம் கொண்டு போய் ஆலமரத்தின் நிழலில் நிறுத்தி வை!'' என்றாள்.

பிறகு, ஜோதிடர் வழிகாட்டி முன் செல்ல, குந்தவையும் வானதியும் அவ் வீட்டுக்குள்ளே சென்றார்கள்.

ஜோதிடர் தம் சீடனைப் பார்த்து, ''அப்பனே! வாசலில் ஜாக்கிரதையாக நின்றுகொண்டிரு; தப்பித்தவறி யாராவது வந்தாலும் உள்ளே விடாதே!'' என்று எச்சரித்தார்.



ரச குமாரியை வரவேற்பதற்கு உகந்ததாகச் சோதிடரின் கூடம் அழகு செய்யப்பட்டிருந்தது. சுவரில் ஒரு மாடத்தில் அம்பிகையின் படம் அலங்கரிக்கப்பட்டு விளங்கியது. அமருவதற்கு இரண்டு பீடங்கள் சித்தமாயிருந்தன. குத்து விளக்கு எரிந்தது. அங்குமிங்கும் கோலங்கள் பொலிந்தன. ராசி சக்கரங்கள் போட்ட பலகைகளும் ஓலைச் சுவடிகளும் சுற்றிலும் இரைந்து கிடந்தன.

பெண்மணிகள் இருவரும் பீடங்களில் அமர்ந்த பிறகு, சோதிடரும் உட்கார்ந்தார்.

''அம்மணி! வந்த காரியம் இன்னதென்பதைத் தயவு செய்து சொல்லி அருள வேணும்!'' என்றார்.

''ஜோசியரே! அதையும் தங்கள் ஜோசியத்திலேயே பார்த்துத் தெரிந்து கொள்ளக் கூடாதா?'' என்றாள் குந்தவை.



''ஆகட்டும், தாயே!'' என்று கூறிச் சோதிடர் கண்ணை மூடிக் கொண்டு சிறிது நேரம் ஏதோ மந்திரம் ஜபித்துக் கொண்டிருந்தார்.

பிறகு கண்ணைத் திறந்து பார்த்து, ''கோமாட்டி! இந்தக் கன்னிப் பெண்ணின் ஜாதகம் பற்றிக் கேட்பதற்காகவே இன்று முக்கியமாக வந்திருக்கிறீர்கள். அவ்விதம் தேவி பராசக்தியின் அருள் சொல்கிறது. உண்மைதானா?'' என்றார்.

''ஆஹா! பிரமாதம்! உங்களுடைய சக்தியை என்னவென்று சொல்வது? ஆம், ஜோசியரே! இந்தப் பெண்ணைப் பற்றிக் கேட்கத்தான் வந்தேன். ஒரு வருஷத்துக்கு முன்பு இவள் பழையாறை அரண்மனைக்கு வந்தாள். வந்து எட்டு மாத காலம் மிகக் குதூகலமாய் இருந்து வந்தாள். என் தோழியருக்குள்ளே இவள்தான் சிரிப்பும் விளையாட்டும் கலகலப்புமாக இருந்து வந்தாள். நாலு மாதமாக இவளுக்கு என்னவோ நேர்ந்திருக்கிறது. அடிக்கடி சோர்ந்து போகிறாள். பிரமை பிடித்தாற் போல் இருக்கிறாள். சிரிப்பையே மறந்துவிட்டாள். உடம்புக்கு ஒன்றுமில்லை என்கிறாள். இவள் பெற்றோர்கள் நாளைக்கு வந்து கேட்டால், என்ன மறுமொழி சொல்வது என்றே தெரியவில்லை....''

''தாயே! கொடும்பாளூர்க் கோமகனின் செல்வப் புதல்விதானே இவர்? இவருடைய பெயர் வானதி தானே?'' என்றார் ஜோசியர்.

''ஆமாம்; உமக்கு எல்லாம் தெரிந்திருக்கிறதே!''

''இந்த அரசிளங்குமரியின் ஜாதகம் கூட என்னிடம் இருக்கிறது. சேர்த்து வைத்திருக்கிறேன்! சற்றுப் பொறுக்க வேணும்!'' என்று சொல்லிவிட்டு, ஜோதிடர் பக்கத்திலிருந்த ஒரு பழைய பெட்டியைத் திறந்து சிறிது நேரம் புரட்டினார். பிறகு, அதிலிருந்து ஒரு ஜாதகக் குறிப்பை எடுத்துக் கவனமாய்ப் பார்த்தார்.

(தொடரும்)



# காதல் பரிசு

எடுத்த எடுப்பில் ஜெயிலில் கைதியாக இருக்கும் கதாநாயகனைக் காட்டுகிறார்களா, ஏதோ செமர்த்தியான, உருக்கமான, கனமான கதையைச் சொல்லப் போகிறார்களாக்கும் என்று பார்த்தால் — புஸ்!

ஜெயிலில் நடக்கும் ஆக்ரோஷமான குத்துச்சண்டையைப் பார்த்துவிட்டு, கமலஹாசனைக் காதலிக்கத் தொடங்குகிறார் ராதா. பணக்காரர்களை வெறுக்கும் ஏழைகள் கட்சியைச் சேர்ந்தவன் கதாநாயகன் என்பதால், அவனுக்காக ஏழை வேஷம் தரிக்கிறார். (அந்தப் பாவாடை, தாவணி இரட்டைப் பின்னலைவிட மாடர்ன் சமாசாரங்கள்தான் ராதாவுக்குச் சிக்கென்று பொருந்துகின்றன.)

சரி போனால் போகிறதென்று கமலஹாசனும் காதலிக்கத் தொடங்க, 'அக்காவிடம் அறிமுகப்படுத்துகிறேன் வா' என்று ராதா கமலஹாசனைக் கூட்டிக் கொண்டு போய் அம்பிகாவைக் காட்ட, இருவரும் ஒருவரை ஒருவர் அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டு ராதாவுக்குத் தெரியாத ஒரு ரகசியத்தை உடைக்க — நல்ல திருப்பம்.

சந்தேகப் பிராணி ஜனகராஜ் நல்ல கலகலப்பு. கல்யாண வீட்டுச் சாப்பாட்டை அபேஸ் செய்து கொண்டு வந்து கமலும் அவரது நண்பரும் கமலுடைய அம்மா அஞ்சலிதேவியும் சாப்பிட்டுக் கொண்டிருக்க, அங்கே ஜனகராஜ் பிரவேசிக்க, அபேஸ் விஷயத்தை அறியாத அஞ்சலிதேவி 'உங்க வீட்டுச் சாப்பாடு ஜோர்' என்று பாராட்ட, நல்ல ஹி... ஹி!

கமல்தான் உத்தமக் காதலராயிற்றே? அம்பிகாவை 'டச்' கூடப் பண்ணவில்லை என்று உறுதியாய் இருப்பவராயிற்றே? என்னடா காதலி இப்படி ஓர் அபாண்டமான பழியைப் போடுகிறாளே என்று ஒழுங்காக ஆராய வேண்டாம். அப்படியா அம்பிகாவிடம் 'டூ' விட்டுக் கொண்டு போவார்? (ஊருக்குப் போய்விட்டேன் திரும்பி வந்து ஜெயிலில் சிக்கிவிட்டேன் — சப்பைக் கட்டுகள்)

கமலஹாசன் என்றால் உடைகள் எல்லாம் எப்படி கலர் கலராய் ஜோராய் இருக்கும். இந்தப் படத்தில் அப்படி ஒன்றும் காணோமே!

கமல் இருக்கிறார். அம்பிகா இருக்கிறார். ராதா இருக்கிறார். பாட்டு, டான்ஸ், சண்டை, சேஸிங் எல்லாம் இருக்கிறது. இல்லாதது ஒன்றே ஒன்று — நிறைவு.

# கிழக்கு ஆப்பிரிக்காவில் ஷீலா

கிழக்கு ஆப்பிரிக்கக் காடுகளின் அடர்த்திகளில் புகுந்து புகுந்து எடுக்கப்பட்ட லேடி டார்ஜான் படம்.

நோயில் துன்பப்படும் மக்களுக்கு மருத்துவ உதவி அளிக்க டாக்டர் ஒருவர் தம் மனைவியுடன் காட்டுக்குள்ளே போய், அங்கே வழி தவறி, அந்தக் காட்டிலிருந்து மீள முடியாமல், பெற்ற பெண் குழந்தையை அனாதையாக விட்டுவிட்டு இறந்து போக, அந்தப் பெண் குழந்தைதான் மனிதக் குரங்குகளால் வளர்க்கப்படும் ஷீலா — த — லேடி டார்ஜான்.

இந்தப் பெண் குழந்தையின் தாத்தாதான் மிகப் பணக்கார சாருஹாசன். பையனையும் மருமகளையும் பற்றித் தகவல் தெரிந்து வர ஏராளமாகப் பணத்தைக் கொட்டி ஒரு குழுவைக் காட்டுக்கு அனுப்புகிறார். அந்தக் குழுவில் ஒருவர்தான் கதாநாயகன் சுரேஷ்.

படம் திடீரென்று ஒரு நைட்கிளப்பில் புகுந்து கொண்டு கேபரே ஸ்டைலில் மாறுகிறது. டிஸ்கோ சாந்தி வேறு கண்ட கண்ட போஸ்களில் ஆடுகிறார். வில்லன்கள் எல்லோரும் நல்ல பல் வரிசை பெற்றிருக்கிறார்கள். ஒரு முகத்தைக் கூட அடையாளம் தெரியவில்லை என்றாலும் கடைசிவரை 'ஹா ஹா ஹா' என்று சிரித்தே படத்தை நகர்த்திக் கொண்டு போகிறார்கள்.

லேடி டார்ஜான் முதல்முதல் போடும் சண்டைக் காட்சி அபாரம்.

சுரேஷும், ஷீலாவுமாகப் பாடும் அந்தத் தமிழ் கற்றுக் கொடுக்கும் பாட்டு கேட்பதற்குச் சுகம்.

கதை, திரைக்கதை, டைரக்ஷன், தயாரிப்பு துவாரகேஷ். தயாரிப்பாளரும் என்பதால் ஏகப்பட்ட டென்ஷனோடு வேலை செய்திருப்பாரோ என்னவோ! பாவம், கதையை இஷ்டத்திற்குத் திருப்பிக் கொண்டு போகிறார். இஷ்டத்திற்கு வசனம் பேச வைத்திருக்கிறார்.

காமிரா, மிருகங்களை எல்லாம் துரத்தித் துரத்திப் படம்எடுத்திருப்பது பாராட்டப்படவேண்டியவிஷயம்.

செந்தில் காமெடி அப்படி ஒன்றும் ஓஹோ இல்லை. லோ லோதான்.

இதே படத்தை, வேறு சில மொழிகளிலும் உருவாக்கி இருக்கிறார்களாமே! ஒருவேளை மற்ற மொழிக்காரர்கள் எல்லாம் நம்மைவிட நன்றாக ரசிப்பார்களோ என்னவோ!

— ஜெயமன்மதன்



# அமைச்சு வேட்டி!



மழை பெய்யக் காணலியே என்று உச்சி வெயிலானாலும் வானத்தைப் பார்த்து ஏங்குகிறார், 'மேகம் சூழ்ந்துக்காதா?' என்று நப்பாசை கொள்கிறார் அப்பாத்துரை அண்ணாச்சி. தண்ணீர் காணாமல் வாடி வதங்குகிற ஜனங்களைக் காணச் சகிக்க' வில்லை அவருக்கு....

''அண்ணாச்சியோவ்.... நெசந்தானுங்களா... நம்ப முடியலீங்களே...'' என்று படபடப்பாக ஓடி வந்து கேட்டார் பேச்சிமுத்து.

''ஆமாய்யா நெசந்தா... தடபுடலா வர வேத்திடணும்'' என்றார் அண்ணாச்சி. பிறகு குரலைத் தழைத்துக் கொண்டு ரகசியம் பேசுவது போல பேச்சிமுத்துவிடம் கூறினார்: ''கரிசக் காட்டுக்காரங்க இலேசுப்பட்டவங்க இல்லேங்கறதை உணர்த்திப் போடோணும்'' மேல்துண்டை இழுத்து முதுகுப்புறமாக நீளத் தொங்கவிட்டு இடுப்பை நிமிர்த்தி உட்கார்ந்து பேசினார்: ''அமைச்சரு வாராருங்கறதை எல்லாருக்குஞ் சொல்லிப் போடலாம். அன்னைக்கு ஒரு பொட்டு சனங்கூட காடு கரை கழனின்னு போயிடக் கூடாதும் வோய்... ஊரே திரண்டு நின்னு அவரை உபசரிக்கலேன்னா நம்ம மானம் மருவாதி என்னாகிறது....'' சிரித்தார்.

ஊர் முழுக்கப் பேச்சுக் கிளம்பிவிட்டது: ''மந்திரி வாராராமே'' ஓர் அதிசயம் போல எல்லாரும் பேசிக் கொண்டார்கள்.

அவர்களுக்கு மந்திரியிடம் காரியமாக வேண்டியிருந்தது. ஊர் வளமை கெட்டுப் போகும் முன்னால் காப்பாற்ற வேண்டும். இந்தப் பொட்டல் காட்டை வளப்படுத்தும் சூட்சுமத்தைத் தெரிந்துகொண்டிருந்தார்கள். அதை மந்திரியிடம் வலியுறுத்த வேண்டும். பெருங்குளத்தைத் தூர் எடுத்து மண் வாரி ஆழப்படுத்திக் கரையை உயர்த்தினால் நீரைத் தேக்க முடியும். ஊருக்கு அப்பால் குறைந்த தொலைவில் ஓடுகிற காட்டோடையை ஒடித்துக்கொண்டு வந்து சேர்த்துவிட்டால் பெருங்குளம் நிறையும். பாசனமாகும். வெள்ளாமை கூடும். ஏகபோகமாய்ச் செழிக்கும். அண்டை அயல் கிராமங்களும் பிழைக்கும்.

பொன். ஜெயந்தன்

பெண்கள் முச்சந்தியைப் பெருக்கினுர்கள். குப்பை கூளங்களை இலைச் சருகுகளை அள்ளினுர்கள்.

அப்பாத்துரை அண்ணுச்சி அந்த இடத்திற்கு வந்து போனுர். கேலியான சிரிப்பை நமட்டியவாறுஇருந்தார். சின்னஞ்சிறுவர்கள் ஓடிப்பிடித்து, கட்டிப் புரண்டு, குதித்துக் கும்மாளமிட்டு விளையாடினுர்கள். ஒரு திருவிழாவின் குதூகலம் அவர்களுக்கு இருந்தது. ஒரு பொடியன் கத்தினுன்: "வேடியோ கட்டு தாங்கடோய்."

மதியம் போல அண்ணுச்சி வீட்டுக்கு, வெள்ளையும் சொள்ளையுமாக நாலைந்து மனிதர்கள் கைகளில் சிறுசிறு தோல் பைகளோடு வந்திருந்தனர். அண்ணுச்சி அவர்களை நகரத்திலிருந்து வரவழைத்திருந்தார். தாமே முன்னின்று உபசரித்து ஒய்வெடுக்கச் செய்திருந்தார். அவர்கள்கூடத் தயாராகி வந்து கொண்டிருந்தார்கள்.

"அவங்கள்லாம் ஆரு?" — என்று நீட்டி முழக்கிக் கேட்டார் வைத்தி.

"பேப்பர் ஆளுங்களாம்" என்று தனக்குத் தெரிந்ததை, தன்னளவில் பெருமை கொண்டு சொன்னுர் பாண்டித்துரை.

"இன்னும் அமைச்சர் வரலையா?" — அவர்களில் ஒருவன் வினவினுன்.

கண்மாய்க்கரை மேட்டில் புழுதி பறக்க இரண்டு கார்கள் விரைந்து வந்து கொண்டிருந்தன.

"வந்தாச்சு."

"அய்... காரு.... ப்ளசர் காரு!" என்று பையன்கள் துள்ளிக் குதித்தார்கள். கைதட்டி ஆரவாரித்தார்கள்.

பின் காரில் அமைச்சர் வந்தார். இறங்கும் முன்பாகவே கைகூப்பிச் சிரித்தார்.

செல்லப்பாண்டியனுக்கு நறநறவென்று பற்கள் இறுகின.

"அமைச்சர் வந்துவிட்டார், அமைச்சர் வந்துவிட்டார்" என்று ஒலி பெருக்கி அலற, பெண்டு பிள்ளைகள், சாதி சனங்கள் ஓடி வந்தார்கள். முச்சந்தியில் முண்டியடித்து உட்கார்ந்தார்கள்.

அமைச்சர் பொதுவாக எல்லோருடனும் பேசி நலம் விசாரித்தார். பலவேசம் முண்டியடித்து முன்னே வந்தான். அமைச்சர் அவனைக் கண்டு கொள்ளவே இல்லை. மறித்து நின்ற ஒரு குண்டரை மீறி அமைச்சரின் கையைத் தொட்டான். பல் காட்டினுன், வார்த்தைகளை விழுங்கிக் கேட்டான்: "எனக்கொரு வேலை போட்டுத் தரணும்!"

அமைச்சர் செயலாளரைப் பார்த்தார்.

"ஆரம்பிச்சுடலாங்களா?"

செல்லபாண்டி மேடை ஏறினுன். ஒலி பெருக்கி இரைச்சலோடு ஊதிவிட்டு அடங்கிச் சீரானது. செல்லபாண்டி பேசினுன்:

"..... அமைச்சருக்கு வணக்கம். எல்லாருக்கும்தான். இது ஒரு சின்ன ஊர். அமைச்சர் நம்ம பக்கத்து ஆள். நம்மிலே ஒருவர். உடன் பிறப்பென்ருலும் மிகையில்லை. நம்ம அழைப்புக்கு இணங்கி வந்திருக்காங்க. அவருக்கு ரொம்பப் பெரிய மனசு...."

அமைச்சரோடு வந்தவர்கள் கைதட்டி ஆரவாரித்தார்கள். செல்லபாண்டி பேச்சை நிறுத்தினுன். அமைச்சர் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தார். அண்ணுச்சி புன்முறுவல் காட்டினுர். சின்னஞ் சிறுவர்களும் கைதட்டி மகிழ்ந்தார்கள்.

"இது சிறிய பாராட்டு விழாதான்" அமைதி மௌனமாகச் சூழ்ந்ததும் செல்லபாண்டி விட்ட இடத்திலிருந்து தொடர்ந்து பேசினுன்: "இதைப் போல ஆயிரமாயிரம் பாராட்டு விழாவை ஐயா கண்டிருப்பாங்க. இருந்தாலும் அமைச்சர் ஐயா நம்ம வீட்டுப் பிள்ளை. அல்ல அல்ல நம்ப காட்டுப் பிள்ளை. ஏனெனில் இது காடு. நாம் காட்டில்தான் வாழ்கிறோம். காடென்ருலும் சரியான பொட்டல் காடு...."

பத்திரிகை நிருபர்கள் செல்லபாண்டியின் பேச்சைக் கவனமாகக் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்கள். அப்பாத்துரை அண்ணுச்சி அவர்களை வேண்டிக் கொண்டிருந்தார்.

அமைச்சரின் தனிச் செயலாளர் பலவேசத்தைத் தனியே அழைத்துக் கொண்டு போய்க் கேட்டார்: "என்ன படிச்சிருக்கே?"

"எட்டாங் க்ளாஸ்."

"அடடடடா...வேலைவெட்டி இல்லாமலா இருக்கே?"

"ஏதோ அப்பப்ப கூலி வேலை செய்றேனுங்க... வருமானம் சரியில்லிங்க. அதான் ஏதாச்சும் நல்ல வேலைக்குப் போவலாம்னு நெனைக்கேன்."

"ஓ... பேஷா... போகலாம்... என்ன வேலை வேணும்."

"ஏதாச்சும்."

"மில் வேலை செய்வியா? சேர்த்து விட்ரலாம்."

"கெடைக்குமுங்களா?"

"அமைச்சர் மனசு வச்சா முடியாதா? உனக்குச் செய்யாமலா? உடனே செய்வார்."

"ஐயா நல்லவருங்க."

"ஒம்பேரு என்ன சொன்னே?"

"பலவேசம்."

"இதோ பாரு பலவேசம், அஞ்சு ரூபா வெச்சிருந்தாய்ஞ உடனே வேலை. அமைச்சர் முடிச்சிடுவார். ஐயாவுக்கு வேணும். அதிகாரிங்க கேட்கிறுனுங்களேப்பா, அஞ்சாயிரம் ரூவாய் வச்சிருக்கியா?"

பலவேசத்தின் விரலில் மோதிரம் மினுக்கியது. அமைச்சரின் செயலாளருக்குப் பதில் கூருமல் விலகிப் போய் நின்று மேடையைக் கவனித்தான். அமைச்சர் கை விரல்களைக் கோத்துக் கொண்டு காலாட்டியவாறு உட்கார்ந்திருந்தார்.

பலவேசம் கத்தினுன்: "மாண்புமிகு அண்ணன் நம் நாட்டுச் சிங்கம். அமைச்சர் அ.உ. நல்லதம்பி அவர்கள்...."

'வாழ்க — வாழ்க' — சிறுவர்கள் கோரஸாக முழங்கினுர்கள். கூட்டத்திலிருந்து ஒரு வயதான பாட்டி எழுந்துமேடையைநோக்கித் தள்ளாடி நடந்து வந்தாள். தட்டுத் தடுமாறி

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 5

**வாழ்க்கையில் வெற்றி பெற நிச்சயம் உதவும் இந்தப் போட்டியிலும் வெற்றி அடைய முயற்சி செய்யுங்கள்!**

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் தரப்பட்டுள்ள நான்கு பொன்மொழிகளைப் பின்வரும் நால்வர் கூறியுள்ளனர். எதை யார் சொன்னது? அந்தப் பெயரையொட்டி நீங்களே உங்கள் கைப்படப் பொன்மொழியை முழுமையாகப் பிழையின்றி எழுதி உங்கள் விலாசத்துடன் எங்களுக்கு அனுப்புங்கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படும். உறையின் மீது பொன்மொழிப் போட்டி — 5 என்று குறிப்பிடத் தவறாதீர்கள்.



**பிளேட்டோ:**

**மார்க் டுவெய்ன்:**

**சத்யசாயி பாபா:**

**டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்:**

**முடிவு தேதி: 18.2.87.**

பெயர்: ..........................................................

விலாசம்: ..........................................................

..........................................................

மேடையில் ஏறினாள். மடிக்கப்பட்ட ஒரு தாளைப் பெற்றுக் கொள்ளும்படி நீட்டினாள். அமைச்சர் எழுந்து கிழவியை ஆதுரத்துடன் தழுவி, மனுவைப் பெற்றுக் கொண்டார். கிழவியின் கரத்தைப் பிடித்துத் தம் சிரசின் மேல் நடுங்கிய அவளது விரல்களை வைத்து வலுக்கட்டாயமாக ஆசி வாங்கிக் கொண்டு அமர்ந்தார்.

"தம்பி,பாண்டியா!பாட்டி சித்தபேசணும். ஒரு நிமிஷந்தா..." என்று செல்லபாண்டியனை நகரச் சொல்லி, மைக் முன்னால் குறுகி நின்று தழுதழுத்த குரலில் பேசினாள் கிழவி: "பாட்டிக்கு வயசாயிப் போச்சு. சாப்பிடக் கொள்ளச் சிரமமாயிருக்கு. சோறு கஞ்சிக்கு வழியும் இல்ல. சொந்தபந்தம் சுற்றம் சூழ யாரும் இல்லே. அரசாங்கம் வயசானவங்களுக்குப் பணம் கொடுக்குதாம். சேலை... வேட்டி தருதாம். சொன்னாக. எனக்கும் கொடுக்கணும்னு வேண்டிக்கிறேன். மந்திரி ஐயாகிட்டே அரிசி கேட்டுப் பணம் கேட்டு, புடைவை கேட்டு மனு கொடுத்திருக்கேன். அதோட ஐயா அவுகளுக்கு ஒரு பத்து ரூபா அதுல சேர்த்து வைச்சிருக்கேன். எனக்கு இதைப் பண்ணித் தந்துடணும்" என்றாள்.

அமைச்சர் சடாலென்று தாளைப் பிரித்துப் பார்த்தார். பத்து ரூபாய் இருந்தது. பாட்டியைக் கூப்பிட்டுப் பணத்தைக் கொடுத்து விட்டுச் சொன்னார்: "பாட்டிம்மா இதெதுக்கு? காசு கொடுத்தாத்தான் காரியம் நடக்கும்னு தப்பால்ல நெனைச்சிருக்கே. உனக்கு 'முதியோர்' பணம் கிடைக்க வழி செய்யறேன்."

பாட்டியை கைத்தாங்கலாகப் பிடித்துக் கீழே இறக்கினார்கள். செல்லபாண்டி பேச்சைத் தொடர்ந்தான்:

"இவரை... இந்த மனிதரை, இவர் அமைச்சர் என்பதற்காக, அதிலும் நமது சட்டமன்ற உறுப்பினரானதால்... நாமெல்லாம் ஓட்டுப் போட்டுத் தேர்ந்தெடுத்தோமே, அதற்காக இங்கே அழைத்துப் பாராட்டு விழா நடத்திக்கொண்டிருக்கிறோம். பாராட்டு விழாவென்றால் — இது ஒரு மாதிரியான — முன்னுதாரணமான பாராட்டு விழா. அதற்கென்று தனிப்பட்ட அர்த்தம் இருக்கிறது."

செல்லபாண்டியின் குரல் மெல்ல மெல்ல உயர்ந்தது.

"மாப்ளே... தைரியமா பேசு. விடாதே. நாங்க இருக்கிறோம்" — கூட்டத்திலிருந்து ஒருகுரல் ஓங்கி எழுந்தது.

செயலாளர் மேடை ஏறி அமைச்சரின் பின்னால் வந்து நின்று குனிந்து காதோடு வாயாக முணுமுணுத்தார். அமைச்சர் சுதாரித்து — நிமிர்ந்து உட்கார்ந்து பேச்சைக் கவனித்தார்.

"......பொதுவாக இன்றைக்கு நாம் லஞ்சம் வாங்குகிற மந்திரிமார்களுக்கு லாலி பாடிக் கொண்டிருக்கிறோம். தம்முடைய ஓட்டுக்களை வாங்கி வெற்றி பெற்று நம்மையே மறந்து விடுகிற அந்த ஆத்மாக்களை வணங்கிக் கொண்டிருக்கிறோம். நாம்தான் அவர்களுக்கு எஜமானர்கள் என்பதை நாமும் மறக்கிறோம். அவர்களும் மறந்துவிடுகிறார்கள். அதனால்

"சாவா தோசைக்கு ஆர்டர் பண்ணி மூணு நாளா உட்கார்ந்திருக்கேன், இன்னும் வரலே."

"இந்தாப்பா சர்வர், இவருக்கு பில்லோட மூணு நாள் ரூம்வாடகையையும் சேர்த்துப் போடு!"

— சேலம். ஆ. கதிர்வேல்.

வந்தவிலேதான். இல்லாவிட்டால் இங்கே உட்கார்ந்து கொண்டிருக்கிறாரே இந்தப் புண்ணியவானைப்போன்ற ஆட்கள் துளிர்க்க முடியாது...."

அமைச்சருக்கு ஆத்திரமான ஆத்திரம். குமுறினார். கொதித்தார். வெகுண்டார். கைப்பிடியை அழுத்தி நாற்காலியிலிருந்து எழுந்தார்.

அ.உ. நல்லதம்பி ஒழுங்கா உட்கார். உனக்குப் பாராட்டு விழாவா வேணும். என்ன சொன்னே... பாராட்டி பண முடிப்பு. இல்லாட்டி எடைக்கு எடை வெள்ளி... இல்லேன்னு கார், கூசாமக் கேட்டியேப்பா. காரை எதிர்பார்த்து வந்தியா? வெக்கங் கெட்ட பயலே... உக்காந்திரு... மரியாதையா சொல்லிப்பிட்டேன்" என்று அப்பாத்துரை அண்ணாச்சி கர்ச்சித்ததும் அப்படியே இருக்கையில் அமர்ந்தார் அமைச்சர். முண்டியடித்து வந்த அமைச்சரின் ஆட்களைக் கூடக் கட்டுப்படுத்திச் செயலிழக்க வைத்துவிட்டது கூட்டத்திலிருந்து கத்திய ஒரு குரல். "டேய்... எவனாவது வாலாட்டினால் நறுக்கிப்பிடுவோம் நறுக்கி... ஒழுங்கா ஊர் போக வேணுமா?"

பலவேசம் கிடுகிடுவென்று மேடை ஏறினான். உரக்கச் சொன்னான்: "இந்த ஆளுகிட்டே எனக்கொரு வேலை வாங்கிக் குடுக்கக் கேட்டேன். அஞ்சாயிரம் ரூபா கொடுத்தா வேலை கிடைக்குமாம். கொடுத்துடலாமா.... வேலைதானே பெரிசு. அச்சாரமா இந்த மோதிரத்தை இப்பக் கொடுக்கேன். வேலை கிடைச்சப்ப மீதியக் கொடுத்துர்றேன்!" என்று விரலிலிருந்து மோதிரத்தைக் கழற்றி நீட்டினான். அமைச்சருக்கு முகம் செத்து விட்டது.

"அ.உ. நல்லதம்பி... வாங்கிக்கோப்பா" என்று குத்தலாகச் சொன்னார் அண்ணாச்சி.

"....இவர் இந்தத் தொகுதி உறுப்பினர். தொகுதிக்கு, நமக்கு, நல்லது செய்வார் என்றுதான் ஓட்டுப் போட்டோம். நமது பிரதிநிதியாயிருந்தும் குறைகளைக் களைய இவர் முயலவில்லை. ஜெயித்த கையோடு நம்மையெல்லாம் மறந்துவிட்டார். நாம் எக்கேடு கெட்டுப் போனாலென்ன... இந்த ஆள் சுகமாயிருந்தால் போதும். பணம் பணம் பணம். இவர்களேதான் லஞ்சம் வாங்கினால் தண்டனை என்று சட்டம் எழுதுவார்கள். ஆனால் லஞ்சம் வாங்கிக் கொண்டிருப்பார்கள். பணமில்லாமல் ஒரு காரியத்தையும் செய்ய மாட்டார்கள்.

விதியே என்று அமைச்சர் உட்கார்ந்து விட்டார். நொந்து போனார். தப்பித்துப் போனால் போதுமென்றிருந்தது. மானக் கேடான சம்பவம்.

"நமது நிலங்கள் காய்கின்றன. தண்ணீர் இல்லை. ஜனங்கள் செத்து மடிகிறார்கள். ஊர் காலியாகிவிடும் என்று எடுத்துச்சொன்னோம். படித்துப் படித்துக் கூறினோம். விழலுக்கு இறைத்த நீர். செவிடன் காதில் ஊதிய சங்கு போலானது. ஒரு பிரயோசனமும் இல்லை. பெருங்குளத்தில் தூர் வாரலாம் என்றோம். கால்வாய் வெட்டிக் காட்டோடையைத் திருப்பிவிடலாம் என்றோம். சாத்தியமாகிற திட்டம்தான் என்று வலியுறுத்தினோம். ஐயா பொருட்படுத்தினாரா? நம்மைச் சந்திக்கக் கூடத் தயங்கினார். விடாப்பிடியாய் நின்றபோது பல்லைக் காட்டினார். கவனிக்கணுமாம். அன்பளிப்பு தர வேணுமாம். யோசனை கூறுகிறார்: அமைச்சருக்குப் பாராட்டு விழா நடத்துகிற சாக்கில் பணம் தரலாமாம். அன்பளிப்பாய்ப் பொருள் நீட்டினால் எடுத்துக் கொள்வார்தான். காராகவும் பரிசளிக்கலாமாம். கேட்டார் இந்த மனிதர். பெற்றுக் கொள்ள ஓடோடி வந்திருக்கிறார். நமது குறைகளைச் சொன்னபோது வராத மனிதர், தொகுதியைச் சேம நலம் விசாரிக்காத மனிதர், இப்போது வந்திருக்கிறார் என்றால் என்ன அர்த்தம்! ஜனநாயகத்தின் பெயரால் ஒரு கூட்டம் கொள்ளையடிக்கிறது. ஊரைச் சுரண்டுகிறது."

கூடியிருந்த கிராம மக்கள், 'ஆமாம்' என்று கூக்குரலிட்டார்கள். கைதட்டி ஆரவாரம் செய்தார்கள்.

"இத்தகைய மனிதர்களுக்கு நாம் பாடம் புகட்ட வேண்டாமா? நம்மை ஏய்க்கிறவர்களை நாம் அடையாளம் கண்டு கொண்டு ஊருக்கு, உலகுக்குத் தெரிவிக்க வேண்டாமா?"

அமைச்சர் உள்ளுக்குள் கறுவினார். பழி வாங்கிவிடத் துடிக்கும் உணர்ச்சியில் தத்தளித்தார். சூழ்நிலை சாதகமாக இல்லை. பக்கத்தூர்தானே என்று பரிவாரங்கள் இல்லாமல் வந்தது தவறுதான் என்று நினைத்தார். கையைக் கட்டிப் போட்டதுபோல உணர்ந்தார். திருடர்கள் வேறு கண்முன்னால் எழுதி, பயங் காட்டினார்கள். நாளை எதிர்க் கட்சிப் பத்திரிகைகள் எல்லாம் விரித்து கட்டி எழுதும். நாற்றமடிக்கும். முதலமைச்சருக்குச் செய்தி கிடைத்தால் வேறு வினை வேண்டாம். மந்திரி பதவி பறிபோய்விட்டது போல நினைத்தார். யோசனை தாவித் தாவி அலைக்கழித்தது. சோர்ந்துபோனார். முகம்தொங்கிப் போக எழுந்தார். ஆளாளுக்குப் பேசியது விண்டலாக ஒலித்தது. எல்லோரும் எள்ளி நகையாடியதாகப்பட்டது. தளர்வாக நடந்து கீழிறங்கினார். ஏற்றிக்கொள்ளக் கார் அருகே வந்தது. நையாண்டி மேளம் ஒலிக்க அமைச்சர் காரில் ஏறினார்.

"..... நாம் வாக்காளர்கள். நாமே இந்த ஜனநாயகத்தின் மன்னர்கள்: அரசர்கள் அடிமைப்பட்டுப் போகலாமா?" செல்லபாண்டி ஆவேசமாக முழங்கினான்.

** நீ சந்தோஷமாக இருந்தால் உலகமே சந்தோஷமாக இருப்பதாக எண்ணுகிறோம்; நீ அமைதியற்று இருந்தால் உலகமே உபயோகமற்றதாகத் தோன்றுகிறது. எனவே அன்பு, அமைதி ஆகிய குணங்களை இளைஞர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும்.



15

# மோகம்

"அப்பா...! அம்மா.... அப்பா ஸ்கூலுக்கு போறாரும்மா" டெம்போ வேனி லிருந்து எட்டிப் பார்த்த புவனேஸ்வரி மகிழ்ச்சியுடன் கத்தினாள். "ட்ரைவர்.... ட்ரைவர்.... வண்டியை நிறுத்துங்க..."

இவர்கள் வண்டியைக் கடந்து தன் வழக்க மான நிதானத்துடன் சைக்கிளை மிதித்தபடி செல்லும் கணவனை ஞானம் பார்த்தாள்.

உஷா சுப்பிரமணியன்

# என்பது இதுதானோ?

ஒரு வினாடிதான்.... அவர் இவர்களைக் கவனித்ததாகத் தெரியவில்லை. அவர்கள் ஒரு புறமும், சுந்தரம் வேறுபுறமுமாகிப் போனார்கள்.

"உஷ்.... கத்தாதேமா புவனா.... அப்பா ஸ்கூலுக்குத்தான் போறாரு. வீட்டுக்குத் திரும்பாமலா போயிடுவாரு? சாயங்காலம் பார்த்துப் பேசினாப் போவுது... இதற்கா இப்படிக் கத்தி அமர்க்களம் செய்யறே?" என்று ஞானம் மகளை அடக்கினாள்.

"ஆனாலும் உங்க மகளுக்கு அப்பா செல்லம் ரொம்ப அதிகம்னு நினைக்கிறேன்! சதா அவங்க பெருமைதான் பேசுது!" — இது செல்வி.

ஞானத்துக்கே இது பெரிய குறைதான். புவனா எவ்வளவுதான் அவளிடம் அன்பாக இருந்தாலும் தந்தையிடம் காட்டிய மதிப்பை அவள் தனக்குத் தரவில்லைதான். அவளும் கூடத் தன் கணவனைப் பற்றி இத்தனை நாள் மிகவும் உயர்வாகத்தான் எண்ணிக் கொண்டிருந்தாள். பணம், காசு என்று வாரிக் கொழிக்காவிட்டாலும், படித்தவர், பண்பும் நிதானமும் கொண்டவர். நேர்மை தவறாதவர். எல்லோராலும் மதிக்கப்பட்டவர். வாத்யார் வூட்டம்மா என்றால் உள்ளூரில் என்ன, அக்கம்பக்கத்து ஊர்களிலும்கூட ஒரு மதிப்பு இருந்ததுதானே.... எல்லாவற்றிற்கும் மேல் தன் மனைவி, குழந்தைகளிடம் அவர் காட்டிய அன்பும், ஈடுபாடும் எவ்வளவு உண்மையானது!

ஆனால் கடந்த ஒரு வார மாறுபட்ட வாழ்வு, அவளைச் சிந்திக்க வைத்தது. அவள் வாழ்வில் என்னதான் சுவை இருக்கிறது? கணவன், குழந்தைகள், வீட்டு வேலை தவிர வேறு ஏதாவது அனுபவம் உண்டா? வெளி மனிதர்களுடன் பழகி, பேசி, சமதையாகச் சிரிக்க ஏதாவது வாய்ப்பிருந்திருக்கிறதா? உறவு மனிதர்கள் வீட்டிலோ, ஊர் மனிதர்கள் வீட்டிலோ ஏதாவது விசேஷமென்றால் கணவனைப் பின்தொடர்ந்து சென்று, பெண்களுடன் அமர்ந்து, வெறும் சௌக்கிய சமாசாரங்கள் பேசி, விருந்து சாப்பிட்டு, வீடு திரும்பியதோடு சரி... ஆணும் பெண்ணுமாக வித்தியாசமில்லாமல் சரிநிகர் சமானமாகப் பேசி, ஒருவரை ஒருவர் கேலி செய்து கொண்டு, புகழ்ந்து கொண்டு, சண்டை யிட்டுக் கொண்டு, பாடிக் கொண்டு இருந்தது எவ்வளவு இன்பமாக இருந்தது. ஏன் அவள் கணவர் வீட்டு வாழ்க்கை முறைகளும், இந்த ஊர் விதிமுறைகளும் மட்டும் மாறுதலாய் இருக்கின்றன? உண்மையான மகிழ்ச்சியென்றால் என்னவென்றே அறியாமல், சதா இயந்திர கதியில் இயங்கும் அவள் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா?

வள்ளுவர் கோட்டத்தைப் பார்க்கச் சென்றபோது அவர்கள் அனைவரும் நடு ரோட்டில் குச்சியில் ஒட்டிய ஐஸ் க்ரீம் வாங்கித் தின்றது நினைவுக்கு வந்தது. அவ்வளவு பேரும் ஒரு சில கணங்கள் குழந்தைகளாகவே மாறி, ஐஸ்க்ரீமை நக்கியது போல் அவள் இனி ஒருமுறை செய்ய முடியுமா? கடற்கரை அலையில் கால் வைக்கப் பயந்து நின்றவளை, அனைவரும் கைகோத்துத் தைரியமளித்து நீரில் கால் நனைய வைத்தது போல் ஒரு நட்பை இனி அவள் காண முடியுமா? சுந்தரம் அருகிலிருந்தால் தாலி கட்டிய மனைவியைக் கூடப் பிறர் முன் கைப்பற்றியிருக்க மாட்டார். இவர்கள் வரிசையாகக் கை கோத்து நின்றபோது ஆண், பெண் என்று இனம் பிரித்தா பார்த்தார்கள்? இங்கே வீட்டிலோ, சிவகாமி அக்கா புருஷர், பெரிய மாமா, அவள் முகம் நிமிர்ந்து பார்த்துச் சௌக்கிய சமாசாரம் கூட விசாரிக்க மாட்டார். அப்படி ஒரு கட்டுப் பெட்டித்தனம்!

"அண்ணி! இந்த நெறம் உங்களுக்கு நல்லாவே இருக்கிறது...." "புவனாப் பொண்ணை விட அவங்கம்மாவான நீங்கதாங்க அழகு... உங்களை யாரும் ரெண்டு பெண்களைப் பெத்தவன்னு சொல்லவே மாட்டாங்க..." என்பது போன்ற நாணமூட்டக்கூடிய புகழாரங்களை அவள் இனி எப்போது கேட்கப் போகிறாள்?

ஞானத்திற்குக் கணவன்மேல் வெறுப்பாக வந்தது. அவருக்குத் தன்னைத் திருமணம் செய்து கொடுத்த தன் பெற்றோர் மேல் ஆத்திரமாக வந்தது. "பாழுங் கிணற்றில் தள்ளறாப்பல என் அருமை, பெருமை தெரியாமல் இப்படி என் வாழ்க்கையைப் பாழாக்கிட்டீங்களே...." என்று பரலோகம் சென்றுவிட்ட தன் பெற்றோரிடம் முறையிட்டாள். கணவன் அவள் கணிப்பிலும், மதிப்பிலும் மிக, மிகத் தாழ்ந்து போக, சுய இரக்கம் அவளைத் தாக்கியது. "யாரைச் சொல்லி என்ன பயன்.... என் ஜாதகத்திலே அதிர்ஷ்டம்னு ஒண்ணைப் பிரம்மா எழுதாமவில்ல வெச்சுட்டான்!"

"அம்மா.... எறங்கும்மா...." புவனா உசுப்ப, ஞானம் அவளைத் தொடர்ந்து டெம்போவிலிருந்து குதித்தாள்.

"வாத்யாரம்மா... சாமானைப் புடியுங்க...." அவர்கள் எடுத்துச் சென்ற டிரங்குப் பெட்டி தவிர புதிதாக வாங்கிய தோளில் மாட்டும் பை, ப்ளாஸ்டிக் பாய், காற்று ஊதும் தலைகாணி எனச் சுமந்தபடி இறங்கினார்கள்...

"வர்றேங்க.... உங்களுக்கு எப்படி நன்றி சொல்றதுன்னே தெரியலைங்க..." ஞானம் தமிழ்ச்செல்வனிடம் கைகூப்பியபோது நிஜத்திலேயே அழுதுவிட்டாள்.



> "நமது எம்.எல்.ஏ. நம் தொகுதி மக்களின் துயர் நீக்க கடந்த மூன்றாண்டு களாக ஆற்றியிருக்கிய பணிகளுக்காக மக்களின் அன்பும் பரிசாக அவருக்கு இந்த மெத்தை தலையணையைப் பரிசளிக்கிறேன்."
>
> — என்.வி. ரமணி

"நாம்தான் ஒரு குடும்பமாயிட்டோங் களே... நமக்குள்ளே இனி நன்றி எதுக் குங்க.... நாம் இனிமேல் அடிக்கடி சந்திப் போம். மேலிடத்திலேயிருந்து பாப்பாவுக்கு ஏதாவது ஏற்பாடு ஆயிடுத்துன்னு, மெட்ரு ஸுக்கு அப்பப்ப சேர்ந்துதானே போகணும்,- வரணும்... என்ன பாப்பா, அண்ணனை மறந் துடாதே... என்னதான் நாம உள்ளூரானு லும் உங்க அப்பா எங்களையெல்லாம் வீட் டுக்குள்ளே சேர்க்கமாட்டாரே...."

"அதெல்லாம் இல்லைங்க... நீங்க அடிக்கடி வரணும்..." புவனா குறுக்கிட்டாள். அவளுக் குத் தமிழ்ச் செல்வனையோ, அவர் நிறம் மாறும் மனைவியையோ அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்றாலும், அவர்கள் மூலம் தான் தனக்குப் புகழும் பணமும் கிடைக்கும் என்று புரிந்திருந்தது.

**"லோ**கு அக்கா...." புவனா ஆவலுடன் கதவு தட்டியபோது, மிக நிதானமாகவே 'டக்' கெனத் தாழ் விலகியது. எள்ளும் கொள்ளும் வெடிக்கும் முகத்துடன் லோகு கதவைத் திறந்தாள். "அக்கா...." என்று அவள் கழுத்தில் ஊஞ்சலாடிய தங்கையை, "சரிதான் நகருடீ...." என்று தள்ளினாள்.

"என்னடீ லோகு... அப்பா சாப்பிட்டுட் டுத்தானே கிளம்பினார்...." என்று பழக்கம் காரணமான கேள்வியைக் கேட்ட தாயிடம், "சாப்பிடாமல் ஏன் போறாரு... ஆக்கிப் போட்டுத்தானே என்னைப் பெத்து வச்சிருக் கீங்க..." என்று 'ணக்'கெனப் பதிலிறுத் தாள். ஞானமே சில விநாடிகள் திகைத்து விட்டாள். "உஷ்... அப்படியெல்லாம் பேசாதே..." என்று அவள் கன்னத்தை வழித்தாள். "உனக்குப் பட்டணத்திலிருந்து என்னவெல்லாம் வாங்கியாந்திருக்கேன் பாரு.... இந்தா க்ரீம்ப் ஜார்ஜெட்டுப் புடைவை.... பட்டணத்திலே எல்லாம் இது தான் கட்டறாங்க... கீழே கொசுவம் வைத்த உன் பாவாடை பாரு...."

மூத்த மகள் இதற்கெல்லாம் மசிந்து கொடுக்காததைக் கண்ட ஞானம், "லோகு, நாங்கள்லாம் எப்பவோ ஒரு நடை பட்டணம் போகப் போகிறோம். ஆனால் நீ உங்க அத்தா னோட பட்டணத்திலேயே வாழப் போறவ... ஒவ்வொரு முறையும் ஊருக்கு வர்றபோது நீதான் எங்களுக்கு விதவிதமா, சாமான் வாங்கியாரணும்..." என்றாள்.

"அக்கா! நாங்க ரஞ்சித் அண்ணனைக் கூடப் பார்த்தோம்." புவனா தொடர, லோகு வாய் பிளந்து கேட்டாள். அவள் கனவு இன்னும் விரிந்து, பரந்தது.... எப்படியா வது நித்யா அத்தான் சீக்கிரமே அவள் கழுத் தில் தாலி கட்டிப் பட்டணத்துக்கு அழைத் துச்சென்றுவிட்டால்போதும்போலிருந்தது.

**"பு**வனேஸ்வரி.... புவனேஸ்வரி.:.." வாயிற்புறம் குரல் கேட்டது. பரீட்சை எழுதி முடித்து வீட்டுக்குச் செல்லும் அவள் வகுப் புத் தோழிகள் நின்றிருந்தனர். "பட்டணத் தில் போய்ப் பாட்டுப் பாடினியாமே?"

புவனா தன் அனுபவங்களை ஆவலுடன் விவரிக்க, அவர்கள் அனைவரும் அவளை ஒரு சினிமாக் கதாநாயகி அந்தஸ்துடன் பார்த்த னர். "இனிமேல் நீ பட்டணத்திலேயே தங் கிடுவியா?"

"சே... சே.... அதெல்லாம் இல்லே. எப்ப வாச்சும் கூப்பிட்டாப் போவேன். அவ் வளவுதான்..."

"ஆமா.... இந்த வருஷம் நீ முழுப் பரீட்சை யே எழுதலேயே... உன்னை பெயிலாக்கிட மாட்டாங்க?"

"அவங்க அப்பாவே நம்மஸ்கூல்லவாத்தியார், அவரு ஹெட்மாஸ்டர்கிட்டே சொல்லி பாஸ் போட்டுற மாட்டாரா?"

"பரீட்சை எழுதாம எப்படி பாஸ் போடு வாங்க?"

"அப்போ, புவனேஸ்வரி, நீ அடுத்த வருஷமும் ஒம்பதாவதிலேயே படிப்பியா?"

"அய்யய்யே... அதெப்படி பெயிலான வங்க,சின்னகிளாஸ்பசங்களோட படிப்பா?" ஆளுக்கு ஆள் பேச, புவனா சில விநாடிகள் ஸ்தம்பித்துப் போனாள். பள்ளிக்குப் போகா மல் நாள் முழுவதும் வீட்டிலும் உட்கார்ந் திருக்க முடியாது. அப்புறம் லோகுவைப் போல் சதா முணுமுணுக்கத் தோன்றும். வீடு என்றால் சட்டதிட்டங்கள் வேறு... நாள் முழுவதும் மாத நாவல் படிக்க அவளுக்குப் பொறுமையும் கிடையாது. மறுபடியும் ஒன்ப தாவது வகுப்பு படிப்பதைத் தவிர வேறு வழியே கிடையாதா? அவள் கண்களில் நீர் அரும்பியது.

"அட.... கண்ணில் என்ன குழாயா வச் சுருக்க. நினைச்சா திருப்பிவிட... இப்ப அழுத் துவங்காதே... உங்கப்பா உன்னைக் கட்டாயம் பாஸ் பண்ணி வைத்திடுவாரு...." ஒருத்தி சமாதானப்படுத்தினாள்.

புவனா சற்றே மனம் தெளிந்தவளாக அவர்களை உள்ளே அழைத்துப் பட்டணத்தில் தாங்கள் வாங்கிய புதுப் பாவாடை, தாவணி, துணி, மணிகளைக் காட்டினாள். தாங்கள் சந் தித்த பெரிய மனிதர்களைப் பற்றிக் கூறினாள்.

"ஒருகாலத்தில் நீ கட்டாயம் பெரிய ப்ளே பேக் பாடகியாக ஆயிடுவே. அப்போ எங் களையெல்லாம் நினைவில் வைத்துப்பாயா?" அவள் வகுப்புத் தோழிகள் இப்போதே அவளை ஒரு ஜானகியாகவோ, சுசிலா வாகவோ, கற்பனை செய்து பார்த்தனர்.

"ஸார் வர்றாருடீ..." தூரத்தே சுந்தரம் வருவதைப் பார்த்தவுடன் அவர்கள் கிளம்பி

விட்டார்கள்.

''அப்....பா....'' ஒரு வாரப் பிரிவு ஏதோ ஓராண்டுப் பிரிவு போல் தோன்ற ஆவலுடன் தன்னிடம் ஓடி வரும் மகளை நிமிர்ந்து பார்த்தார் சுந்தரம். அவருக்கு மட்டும் என்ன இந்தப் பிரிவு குறுகியதாகவா தோன்றியது. இந்தப் பூவாய்ச் சிரிக்கும் முகத்தைப் பாராமல், கணீர் என்ற குரலைக் கேட்காமல், கோளக் குண்டாய் உருளும் அந்தப் பளபளப்பான திராட்சைக் கண்களின் பார்வையில் படாமல், முற்றுப் புள்ளியே போடாமல், நிறுத்தாமல் பேசும் கலகலப் பேச்சைக் கேட்காமல் என்னமாய்த் தவித்துவிட்டார். சின்னக் குழந்தையாக இருந்தால் தம் ஏக்கம் தீர நெஞ்சோடு அணைத்து, தலைமேல் சுழற்றி இறக்கியிருப்பார். ஆனால், இவள் வளர்ந்த மகள்.

கனிவுடன் நோக்கினார்.. பாசத்துடன் தலையை வருடிக் கொடுத்தார். அன்பு அவர் உதட்டில் புன்னகையாக மலர்ந்தது.

எங்கள் கண்ணம்மா நகைபுது ரோஜாப்பூ
எங்கள் கண்ணம்மா விழி இந்த்ர நீலப்பூ
எங்கள் கண்ணம்மா முகஞ்செந்தாமரைப் பூ
எங்கள் கண்ணம்மா நுதல் பால சூர்யன்...

இவள்தான் பாரதி கண்ட கண்ணம்மா. என் சின்னக் கண்ணம்மா. என் மடிமேல் புரண்டு விளையாடி, இன்று என்னையே ஆட்டிப் படைக்கும் என் குழந்தை சகி... நாளை வேறு ஓர் இல்லத்தில் விளக்கேற்றப் போகும் சரஸ்வதி அவதாரம்.

கணவன் முகத்தில் மகளைக் கண்டதும், உண்டான புன்சிரிப்பைக் கண்ட ஞானம், இதுதான் சமயமென்று அவசரமாகப் புகுந்தாள். ''என்னங்க, லோகு... நல்லா பார்த்துக்கிட்டுதா ஒங்களை? என் கண் தவறோ என்னவோ, ஒரு வாரத்திலேயே வாடினாப்பலே தெரியுறீங்களே... ஆங்.... நம்ம புவனா பட்டணத்தில திருஷ்டி படறாப்பல என்னமாப் பாடினா தெரியுமா. மந்திரியே நேரா கூப்பிட்டுச் சன்மானம், பொடவை, பழம் எல்லாம் வெச்சுக் குடுத்தாரு. உங்க பொண்ணுதான், அப்பா, அப்பா.... எங்கப்பா தான் எனக்குப் பாட்டுச் சொல்லி வச்சாருன்னு சதா ஒங்களைப் பத்திப் பெருமையாப் பேசிட்டு இருந்தது....''

சுந்தரம் பதிலேதும் பேசாமல், ஒரு கவமான மௌனத்துடன் பின்கட்டுக்குச் சென்று, கிணற்றிலிருந்து நீர் இழுத்துக் கை, கால் கழுவிக் கொண்டார். நெற்றியில் பட்டை, பட்டையாகத் திருநீறு தரித்துக் கம்பீரமாக வாசல் திண்ணையை நோக்கி நடந்தார்.

அவரது கம்பீரம் ஞானத்தைப் பயமுறுத்தியது. நியாயம், நேர்மை, தர்மம் இவற்றின் பிரதிநிதியாக அவர் எதிரே நிற்கும்போது அவர்மேல் தோன்றிய கோபம், ஆத்திரம் அனைத்தும் இருக்குமிடம் தெரியாமல் கரைந்து மறைந்தது ஏன் என்பதும் அவளுக்குப் புரியவில்லை.

(தொடரும்)

# விகாரப்படுத்தப்பட்ட சாருஹாசன்






## கொடி பறக்கிறது!

பாரதிராஜா மூன்று மாதங்களுக்குப் பிறகு ஒரு படம் தயாரிக்கப் போகிறார். அதற்குப் பெயரும் சூட்டிவிட்டார். பெயர்: கொடி பறக்கிறது....

இதில் ஒரு சின்னப் பிரச்னை எழுந்திருக்கிறது. அவர் எந்தப் படத்தை எடுத்தாலும் விளம்பரப்படுத்தும்போது முதலில் 'பாரதி ராஜாவின்' என்கிற வார்த்தையைச் சேர்த்துக் கொள்வார். (புதுமைப் பெண் படத்தில் மட்டும் அப்படியில்லை). இந்தப் படமும் தயாராகி, விளம்பரப்படுத்தப்படும்போது படிப்பவர்கள் 'பாரதிராஜாவின் கொடி பறக்கிறது' என்றே படிக்கக் கூடும். அது சற்று தற்பெருமையாகத் தெரியும்.

இதைப்பற்றி பாரதி ராஜா என்ன கருத்து சொல்கிறார்? — கேட்டுப் பார்த்தேன்.

''கொடி பறக்கிறது' என்பதுதான் தலைப்பு. 'என்னுடைய கொடி பறக்கிறது' என நான் பெருமைப்பட்டுக் கொள்வதாக அது அர்த்தமாகாது. கொடி பறக்கிறது படப் பெயரை மற்றவர்கள் அப்படித் தவறாக நினைப்பார்களே என்பதற்காக நான் மாற்ற மாட்டேன். கதைக் கருக்காக வேறு நல்ல தலைப்பு தோன்றினால் மட்டுமே மாற்றலாம். தற்போதைக்கு அப்படத்தின் பெயர் 'கொடி பறக்கிறது'தான்'' என்றார்.

## சாயல் தெரிகிறது!

புத்தாண்டு வாழ்த்துக்களில் சாருஹாசன் அனுப்பியிருந்த வாழ்த்து வித்தியாசமானது.

தமது முகத்தை விகாரப்படுத்தி அதில் ஓவியமாக வரையச் செய்திருந்தார் (வரைந்தவர் பெயர்: ரவி) ஏன்? அவரையே கேட்டேன்.

''என் முகத்தை வெளியிட நான் விரும்பியிருந்தால் என் புகைப்படத்தை வெளியிட்டிருப்பேன்: அது என் நோக்கமல்ல. இது ஒரு வகையான ஆர்ட். வளைந்த கோடுகள் மனிதனின் வக்ரத்தனத்தைக் காட்டுகின்றன. மனித இயல்புகளுக்கு ஓர் உருவம் கொடுத்திருக்கிறார் ஓவியர். அதில் என் சாயல் தெரிகிறது.... அவ்வளவுதான்'' என்றார்.

## மூலம் புரிகிறது!

'வயது முதிர்ந்த கதாபாத்திரங்களில் நடிப்பது ஓர் இனிய அனுபவம்' என்கிறார் சிவகுமார்.

அவர் குறிப்பிட்டது ''இனி ஒரு சுதந்திரம்'' படத்தில் வயோதிகத் தியாகியாக நடிப்பதைத்தான். ரேகாவுக்கு அப்பாவாக வருகிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

பென்ஷனுக்காக கால் தேய நடந்த தியாகியின் மகளை கலெக்டர் கெடுத்து விடுகிறார். அப்புறம் சாதுவாக இருந்த தியாகி, கலெக்டரை எப்படி பழி வாங்குகிறார் என்பதே கதை.

மணிவண்ணனுக்கு இக்கதையின் கரு எங்கே கிடைத்தது? ஒளிவு மறைவின்றி அவரே சொன்னார்:

''பல வருடங்களுக்கு முன்பு ஒரு சினிமாப் பத்திரிகையில் படவிழாப் படங்களைப் பற்றிப் பாடலாசிரியர் எம்.ஜி. வல்லபன் எழுதியிருந்தார். அதில் ஒரு கதை என்னை உறுத்திக்கொண்டே இருந்தது.... அதைமனத்தில் வைத்துக் கொண்டு அதே சாயலில் — அப்படியே அல்ல — ஒரு கதையைச் சமீபத்தில்தான் சிருஷ்டித்தேன்...''

## உறுதி உடைகிறது!

ரேவதி மறுபடியும் படத்தில் நடிப்பாரா, மாட்டாரா? நடிப்பார்! மலையாளப் படமொன்றில் நடிக்கப் போகிறாராம்! தயாரிப்பு, டைரக்ஷன், ஒளிப் பதிவு எல்லாமே அவருடைய கணவர் சுரேஷ் மேனன்தான் என்கிறார்கள்.

## சாதனை நிகழ்கிறது!

இளையராஜா இதுவரை யாரும் சாதிக்காத ஒரு சாதனை புரிந்துள்ளார். 1986—ஆம் ஆண்டு அவர் இசை அமைத்த மொத்த படங்களின் எண்ணிக்கை 47. கிட்டத்தட்ட ஒரு வாரத்திற்கு ஒரு படம் வீதம் இசை அமைத்துள்ளார்!

— இரைஞானி

"மானேஜர் வந்தது முதல் ஜன்னலை மூடு, கதவை மூடு, வாயை மூடு என்கிறாரே?"

"அவருக்கு இன்று 'மூடு' சரியாக இல்லை!"

— லலிதா செல்லப்பா.



---



"தலைவர் முதல், சாதாரண பேச்சாளர் வரை ஒரே சோடாவை வச்சுக்கிட்டு ஆளாளுக்கு ஒரு வாய் மட்டும் குடிக்கிறாங்களே, என்ன காரணம்?"

"'ஆளுங்கட்சிக்காரங்க பணத்தைத் தண்ணியா செலவு செய்யறாங்க'ங்கிற எதிர்க்கட்சியோட குற்றச்சாட்டைப் பொய்யாக்கத்தான் இந்தச் சிக்கன ஏற்பாடாம்!"

— சேலம் நீலமேகன்.

---

"நல்லா மழை பெய்த மறுநாள் இந்த பார்க்குல 'ஜேஜே'ன்னு கூட்டம் வரும்!"

"அப்போதுதான் 'பார்க்' பார்க்க அழகா யிருக்குமோ?"

"அதில்லே, தரை ஈரமாய் இருக்கிறதாலே பூச் செடிகளை ஈஸியா வீட்டுக்குப் பிடுங்கிக்கிட்டுப் போகலாம் பாருங்க...!"

— கிரிஜா மணாளன்.



---



"சரித்திரப் பாடத்துல மட்டும் எப்படிடா பாஸ் மார்க் வாங்கினே?"

"சரித்திர ஆசிரியருக்குக் கணக்கு ரொம்ப வீக்!"

— லெஸ்லி.

---

மானேஜர்: "என்னது? கல்யாணத்துக்காக ஒரு வாரம் லீவு வேணுமா? உன்னை எந்த அசடுயா கல்யாணம் பண்ணிக்கப் போகுது?"

"ஹி... ஹி... உங்க பொண்ணுதான், சார்!"

— அரகண்டநல்லூர் சாதிக்பாஷா.



---




"அந்த நலிவுற்ற கலைஞனுக்குப் பண முடிப்பு தரப் போற விஷயத்தை முன்னாலேயே ஏன் அவருக்குத் தெரிவிச்சீங்க?"

"ஏன் என்ன ஆச்சு?"

"அதைச் சொல்லியே அவர் நிறைய பேர்கிட்ட ஏகமா கடன் வாங்கிட்டார்!"

— என். வி. ரமணி



# அவர் ஒரு கலைக்களஞ்சியம்!

சூரிய ஒளி நிறமற்றதாக இருக்கிறது. சர்வசாதாரண விஷயமாகவும் தோன்று கிறது. அதுபோலத்தான் பெரியசாமித் தூரனும் வெளித் தோற்றத்துக்குத் தூய, எளிய, வெள்ளைக் கதராடை பூண்டு, சுபா வத்தில் அடக்கமாக, ஒன்றுமறியாத சாது போல இருப்பார். ஆனால் நிறமற்ற சூரிய ஒளி, மஞ்சுத் துளிகளை ஊடுருவும்போது வான[illegible] சிதறி வர்ண ஜாலம் காட்டு கிறது[illegible] அப்படி பல்வேறு ஜாஜ்வல்ய மான காரியங்களைச் செய்து ஒவ்வொன்றி லும் வெற்றி முத்திரை பதித்தவர் தூரன்.

'என்ஸைக்ளோபீடியா' உருவாக்குவது என்றால் சாமானிய காரியமா? அதற்கு எவ் வளவு முயற்சியும் உழைப்பும் தேவை? அதுவும்முன்னோடி என்றுஎதுவுமே இல்லாத போது தமிழில் முதன்முதலாகக் கலைக் களஞ்சியத்தை உருவாக்குவது எவ்வளவு கஷ்டம்! கலைக்களஞ்சியத்துக்குப் பொறுப் பாசிரியர் பதவி ஏற்று, மிகக் குறைந்த உதவி யாளர் துணையுடன் கண்ணும் கருத்துமாக அதனை உருவாக்கித் தந்தார் தூரன். கலைக் களஞ்சியத்துக்கு அந்த அந்தத் துறை நிபுணர் கள் கட்டுரைகள் வழங்கியிருந்தாலும் 'எடிட்' செய்வது, சரிபார்ப்பது, புரூப் பார்ப்பது முதலிய வேலைகள் தவிர, பெரும்பாலான கட்டுரைகள் ஆங்கிலத்தில் எழுதப்பட் டிருக்கும் — தமிழாக்கம் தூரனுடையதே! அப்போது அவிநாசிலிங்கம் செட்டியார் கல்வி அமைச்சர். தமிழ் வளர்ச்சிக் கழகத் தில் ஒரு முக்கிய பொறுப்பில் 'கல்கி' அவர் களும் இருந்தார். "இவ்வளவு குறைந்த சம் பளத்தில் உங்கள் குடும்பம் எப்படி நடக்கும்? அமைச்சரிடம் பேசிப் பார்க்க வேண்டியது தானே?" என்றார் கல்கி. தூரனோ, "நான் கேட்கமாட்டேன்; நீங்களும் இதுபற்றி அவரி டம் பேச வேண்டாம்" என்று கூறிவிட்டார். பொதுப் பணத்தைக் கையாள்வதில் இப்படி கஞ்சத்தனம் காட்டப்பட்ட ஆரோக்கிய மான காலம் அது! கலைக் களஞ்சியம் ஆசிரி யர் கடைசியாகப் பெற்ற சம்பளமே ஆயி ரத்துக்கு நூற்றைம்பது குறைவுதான்!

தூரன் போன்றவர்கள் லட்சியத்துக்காக வாழ்ந்த தலைமுறையைச் சேர்ந்தவர்கள். வரு வாயைக் கடைசித் தேவையாகத்தான் கருதி னார்கள். கோவைக்கருகே ராமகிருஷ்ண மிஷின் வித்யாலயா என்ற குருகுலத்தில் தலைமை ஆசிரியராக இருந்தபோது, தமது தேவைகளைக் கணக்கிட்டு, தமக்களிக்கப் பட்டு வந்த குறைந்த ஊதியமும் அதிகமே எனக் கண்டு, ஒரு பகுதியைத் திருப்பிக் கொடுத்துவிட்டவர் அவர்! அதுவும் போக, எஞ்சிய சம்பளத்திலும் சிக்கனம் காட்டி, மிச்சம் பிடித்து ஏழை மாணவர்களுக்கு உதவுவார்! தமக்குப் பிடித்தமான விளையாட் டான கால் பந்து ஆடுவதற்குப் பதில் 'உடல் பயிற்சிக்கு விறகு பிளக்கலாமே; அது மாணவர் இல்லத்துக்குச் சேவை செய்வதாக வும் இருக்குமே' என்று எண்ணி, செயலிலும் இறங்கிக் காட்டியவர் இந்தத் தலைமை ஆசிரியர்!

இந்த வித்யாலயத்தில் இருந்தபோதே கீர்த்தனைகள் எழுத ஆரம்பித்தார். தமிழிசை வளர்க்கும் நோக்கில் தமிழ் இசைப் பாடல் களுக்கு அண்ணாமலை பல்கலைக்கழகம் பரிசு அறிவித்தது. 'பக்தியால் இயற்றிய பாடல் களைப் போட்டிக்கு அனுப்பமாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்த தூரனை, மாணவர் கள் ஒற்றைக் காலில் நின்று மன்றாடி அனுப் பச் செய்தார்கள். முதல் பரிசு கிடைத்தது!

அதன் பிறகு, எத்தனையோ கீர்த்தனைகளை கர்நாடக இசை உலகுக்கு அளித்துள்ளார் தூரன். நாமறிந்த தமிழ் இசைப் பாடல்கள் பல, இசையால் பரிணமித்துப் பிரபலமடைந் தாலும் அவற்றில் பெரும்பாலானவை தோத்திரங்கள் போல இருக்கும். கவி நயத்தை அதிகமாகக் காண முடியாது.

